*Muracoli*

*Muracu 2, oli 2*

*April 08, 1955*

Record no. 945




முரசு 2 | சென்னை | 8—4—55 | வெள்ளி | ஒலி 2



# கிரேக்க புராணம்

மிருக முகமும், மனித உடலும் கொண்ட கடவுளர்கள் உலகெங்கிலும் இருந்திருக்கிறார்கள். பெண்மணி ஒருத்தியின் தலையும், பாய்கின்ற சிங்கத்தின் உடலும் கொண்ட 'ஸ்பிங்ஸ்'தான் எகிப்து நாட்டின் அழியாத நினைவுச் சின்னமாக இருந்து வருகிறது. மெசோப்பட்டோமியாவிலும், இன்னும் பற்பல நாடுகளிலும் பூனைத் தலை கொண்ட தேவர்கள்-கழுகுச் சிறகுடைய கடவுளர்கள்—இன்னும் புரிந்துகொள்ள முடியாத பற்பல உருவங்கள் ஆண்டவனின் சின்னமாக—ஆதிமனிதனின் தெய்வமாக, இருந்துவந்திருக்கிறது. நம் நாட்டிலேயுள்ள யானைத் தலையுடைய எம்பெருமானும் இந்த ரகத்தைச் சேர்ந்தவர்தான்! இவை யாவும் காட்டு நிலையிலே வாழ்ந்த மனிதனின் கற்பனையிலே உதித்த உருவங்கள். ஆனால் கிரேக்க நாட்டிலே ஒரு புதுமை—வேறு எந்த நாட்டிலும் காணமுடியாத புதுமை — அங்கே கடவுளுக்கு விலங்குகளின் வடிவம் கிடையாது! ஆண்டவனுக்கு மனித உருவம் கொடுத்து, அவனுக்கு மனித உணர்ச்சியையும் தந்த முதல் மனிதன் கிரேக்க நாட்டுக்காரன் தான்!

அந்த நாட்டு வரலாற்றிலே நூற்றுண்டுகளுக்கு முன்பு ஐரோப்பாவிலும், மற்ற நாடுகளிலும் வலம் வந்த மந்திரவாதிகளும், மாந்திரிகவாதிகளும் கிடையாது. அவர்களது புராணத்திலே புரோகிதனுக்குஇடமில்லை. கடவுளுக்குக் காணிக்கை கேட்கும் பூசாரிகள் இல்லை. அந்தக் கடவுளர்கள், ஏடுகளிலேதான் வாழ்ந்தார்கள்; இன்று தீண்டத் தகாதவர்களாக மக்கள் மன்றத்தைவிட்டு ஒதுங்கிப் போய்விட்டார்கள்!

எப்படித் தோன்றினார்கள் அந்தக் கடவுளர்கள்? அவ்வளவு விரைவில் எப்படிப் பரவின, அந்தப் புராணங்கள்?—இந்தக் கேள்விகளுக்கெல்லாம் இருபதாம் நூற்றாண்டு வெகு விரைவில் விடைகண்டு விடுகிறது.

ஒரே வரியில் குறிப்பிட வேண்டுமானால் புராண—இதிகாசங்கள் ஆதி மனிதனுடைய குறுகிய மூளையிலே முளைத்தெழுந்த விஞ்ஞானம்! சுற்றுப் புறங்களையும், சூழ்நிலைகளையும் விளக்குவதற்காக அவன் செய்த ஆராய்ச்சியின் விளைவுகள் தான் இப்போது புராண வடிவு கொண்டிருக்கின்றன.

கிரேக்கத்திலே ஒரு கடவுள்-நம் நாட்டு பூமாதேவியைப் போல; பெயர் டெமீட்டர் என்பது! மனித நாகரிகத்தின் முதல் அத்தியாயம் திறக்கப்படும்போது, ஆண்கள் யாவரும் வில்லும், வேலும் கொண்டு வனவிலங்குகளை வேட்டையாடித் திரிந்தனர். அப்போது பெண்கள்தான் உழவுத் தொழிலைக் கைக்கொண்டு வாழ்ந்தார்கள். எனவேதான் விவசாயக் கடவுளை பெண்பாலாகவே சிருஷ்டித்து விட்டனர். பூமாதேவன் இல்லை; பூமாதேவி உருவானாள்!

ஒலிம்ப்பஸ் தான் கிரேக்க புராணங்களின் தேவலோகம்; அதை மாபெரும் மலைத் தொடராகப் பாவித்துத்தான் கவிஞர்கள் பாடியிருக்கின்றனர். மேனியிலே உராய்ந்து தொல்லை கொடுக்கும் காற்றலைகள் அங்கே கிடையாது. மழைத்துளிகள் அங்கே விழுவதில்லை. பனிகூட அங்கே பெய்வதில்லையாம்! வயிறு நிறைய அமிர்த பானம் உண்டு, அப்பாலோ வாசிக்கும் இனிய வீணைகானத்தைக் கேட்டு, கிரேஸ்கள் என்கிற அரம்பையரின் நாட்டியத்தைப்பார்த்து வானமண்டலத்து தேவர்கள் ரம்மியமாகப் பொழுது போக்கி வந்தனர்; தொல்லைகள் தீண்டாத வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர்.

ஆனால் டெமீட்டர் இந்த ரகத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டவள். இன்னலும், இடையூறும் அவளைச் சூழ்ந்தபடியிருந்தது.

ஏன்தெரியுமா, டெமீட்டருக்கு இந்த கதி? இன்பத்தின் எல்லை காணும் இளங்கொடியாக அந்தப் பூமிதேவியைப் படைத்து விட்டால், விளைந்த கதிரை அறுத்த பிறகு முதலையின் முதுகுபோல வெடித்துக் கிடக்கும் தரிசு நிலங்களை-பழம் தந்த பிறகு பட்டுப் போகும் கனி உதிர்ச் சோலைகளை—பச்சைப் பாய்விரித்து பின்னர் பாலை நிலமாகும் புல்வெளிகளை-அவர்கள் எப்படி வர்ணிப்பார்கள்? டெமீட்டர் சிரிக்கும் தெய்வமாக இருந்தால், முன்னூற்று அறுபத்தைந்து நாட்களும் விதை தூவிய மறுதினமே முளைகிளம்ப வேண்டும்; தண்ணீர் பாய்ச்சிய உடனேயே தளிர் தெரிய வேண்டும். எனவேதான் மாரிக் காலத்தில் மகிழ்ச்சியுடனும், கோடைக் காலத்தில் வேதனையுடனும் இருக்கும் தெய்வமாக டெமீட்டரை ஆக்கிவிட்டார்கள்.

டெமீட்டர் சிரிக்கும்போது மண்ணும் சிரிக்கிறது; நவதானியங்களைக் குவிக்கிறது; வளமையும், பசுமையும் பொங்கி வழிகின்றன!

டெமீட்டர் அழுவாள்-காய்ந்து போன கோதுமை வயல்கள், எரிந்து போன பூங்கொடிகள் அவள் அழுகையை எதிரொலிக்கின்றன!

டெமீட்டருக்கு துயரம் வந்து சேர்ந்த கதையே சுவையானது—அந்தப் புராணக் கதை இதோ:

டெமீட்டருக்கு பேரழகே உருவான புதல்வியொருத்தி இருந்தாள். இளவேனிற் காலத்து பூங்கொடி என்று பொருள்படும் பெர்சிபோன் என்றே அவளை அழைப்பர். அவளிடத்திலே வாலிபமும், வனப்பும் ஒருங்கே குடிகொண்டிருந்தன. டெமீட்டரிடமிருந்து அந்தச் சுந்தராங்கியை கொடியவன் ஒருவன் பிரித்துச் சென்றுவிட்டான்.

அந்த மாபாதகன்தான் பாதாள லோகத்தின் பயங்கரத் தலைவன்; செத்துப்போன பூலோக வாசிகளுக்கெல்லாம் அவன்தான் அரசன். பூமியின் மேல்தளத்திலே வெடிப்பு

★ தொடர்ச்சி 4-ம் பக்கம்

மு. க.வின் 'விண்மீன்' (பக்கம்-7)

# பொன்முடியின் கடிதம்...

கொள்கை விளக்கம்

# படையிருந்து என்ன பயன்? அரண் இல்லையே!

அன்புள்ள குமார்,

தியாக உள்ளத்தோடு பொதுத் தொண்டு புரிவதற்காக, ஏதோ எல்லாவற்றையும் துறந்துவிட்டு, துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு வெளிக் கிளம்பிவரத் தயாராக இருப்பதாக அறிவிக்கும் உன்னுடைய கடிதம் கிடைக்கப்பெற்றேன். உன்னுடைய வருகைகண்டு பூரிக்கிறேன். ஆனாலும் ஒன்றை மறைக்காமல் இருக்க முடியவில்லை.

பொது வாழ்விலே குதிப்பதற்கு வேண்டிய துணிவும், நேரமும் உன்னிடம் குவிந்து கிடக்கலாம். நாட்டுப் பற்று உன்னுடைய உள்ளத்திலே பொங்கி எழலாம். பொதுப் பணியாற்றுவதற்கான மனவளம் இன்னும் உனக்கு கிடைக்கவில்லை என்பதை என்னால் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை.

பேரறிஞன் ஒருவன் 'அயோக்கியர்களுக்குக் கிடைக்கும் கடைசி அடைக்கலம்தான் அரசியல் வாழ்வு' என்று எழுதிவைத்துப் போயிருக்கிறான். அதுபோன்ற 'அரசியல் வாதி'கள் நம் நாட்டிலே இன்று மலிந்து கிடக்கிறார்கள். உன்னுடைய வருகை அந்தப் பட்டியலை நீட்டக்கூடாது என்பதுதான் என்னுடைய உள்ளங்கனிந்த பேரவா.

ஆங்கிலத்திலே ஒரு பொன்மொழியுண்டு. வான வீதியிலே உலாவரும் கதிரவன் உலக மக்களுக்கு எவ்வளவு உதவியாக இருக்கிறான்? அவனது கதிர் பட்டு மொட்டுகள் விரிகின்றன. ஆனால் அவன் கக்கும் கனல்கூட மலர்களைப் பொசுக்கி விடுவதுமுண்டு.

அவனுடைய கதிர் மழையால் மெழுகு உருகுகிறது; ஆனால் குட்டையிலே கிடக்கும் சேறு இறுகிக் கெட்டியாகி விடுகிறது. ஒளிவு மறைவின்றி சொல்லிவிடுகிறேன்—அந்த நிலையிலேதான் நீயும் இருக்கிறாய்.

நல்லக் கொள்கை உன்னுடைய மார்புக் கூட்டிலே இருதயத்தைப் பொறுத்தவில்லை; இருதயமென்று ஒன்று இருந்தால் அதை இளகக்கூடியதாகச் செய்யவில்லை. நீ ஒரு குட்டை. உன்னுடைய எண்ணங்கள் அதிலே வழியும் சேற்றுத்திரள். என்னகாரணத்தாலோ அறிஞர்கள் போதிக்கும் உயர்எண்ணங்கள் உன் இதயத்தை இறுக்கிவிட்டது. உன் நெஞ்சுக் கூட்டிலே பொறுமை இருள் சூழ்ந்திருக்கிறது. புகைச்சலும், பொச்சரிப்பும் மிஞ்சி நிற்கின்றன. முதலில் உன்னுடைய முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொள்; அதற்குப் பின்னர்தான் நீ வீட்டை விட்டு வெளிக் கிளம்ப வேண்டும். வீணைப் புண்படுத்துகிறேனே என்று, வழக்கம்போல அவசர முடிவுக்கு வராதே—இது வெறும் 'நிலைமை விளக்கம்' தான்!

''ஆச்சாரியாரை அவசியமில்லாமல் வாயில் வந்தபடி திட்டுகிறீர்களே; சென்ற வாரம் அவர் உலக சமாதானம் குறித்தும், அணு ஆயுதங்களைத் தூக்கி எறிந்து விடும்படியும் அவர் அமெரிக்கருக்கு விடுத்த அறிவிப்பு எவ்வளவு அபூர்வமாக இருக்கிறது, பார்த்தாயா!'' என்று சென்ற கடிதத்தில் எழுதியிருக்கிறாய். உண்மைதான்; தன்னுடைய வாழ் நாளிலேயே முதன் முறையாக ஆச்சாரியார், தான் ஒரு சனாதன வாதி மட்டுமல்ல; அரசியல் வாதியும்கூட—என்பதை உறுதிப்படுத்தியிருக்கிறார். அவரது இந்த போக்கு கண்டு நான் மிக மிக மகிழ்கிறேன். அரசியல் வாதியென்றால் அவன் இப்படித்தான் இருக்க வேண்டும்; 'ஆன்மாவின் மேலுலக யாத்திரையைப் பற்றியோ, கர்ம வினைகளின் விளைவுகள் பற்றியோ அவன் கவலைப்படக்கூடாது; அவன்சரித்திரத்தைப் பொன்னேடுகளிலே பொறிப்பதற்காக எழுத்தாணி பிடித்திருக்கும் எழுத்தாளன்; மத, மாச்சரியங்களை அவன் மக்கள் மனதிலே தூவ விரும்புவானேயானால், இருபதாம் நூற்றாண்டு அவனை அரசியல் அறிஞனென்று ஒத்துக் கொள்ளாது; பரமனின் அருள்பெற வேண்டிய வழிகளைப்பற்றி குன்றக்குடிகளார் பேசட்டும்—இந்தக் குல்லுகபட்டர் ஏன் பேசவேண்டும்?'—என்றுதான் நாங்களும் இத்தனை நாட்களாக முழங்கி வருகிறோம். எனவேதான் ஆச்சாரியாரின் அணுகுண்டு ஒழிப்பு பிரசங்கத்தைக் குறித்து நாங்கள் பேருவகையில்ஆழ்ந்தோம்—பஜனைப் பிரசங்கத்துக்கு அவர் முற்றுப் புள்ளி வைத்துவிட்டாரே, என்ற எண்ணத்தினால்!

ஆனால், ராம்பலத்து வேதியரோ அந்த மகிழ்ச்சியிலே மண்ணையள்ளிப் போட்டு விட்டார். சென்ற வாரத்து 'கல்கி' இதழைப் பார்த்தாயா? அதில் ஒன்பதாவது பக்கத்திலே ஆச்சாரியார் அறிக்கை ஒன்று வெளியிட்டிருக்கிறாரே, அதைப் படித்தாயா? ஸ்ரீராமநவமி வருகிறதாம். அதுபற்றி அவர் இப்படி எழுதுகிறார் :

''ஒவ்வொரு ஊராரும் தங்களுடைய ஊரிலேதான் ராமன் பிறந்ததாக வைத்துக்கொண்டு கொண்டாடுவார்கள். மிகவும் நல்ல விழா. ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் ஆசியும், உத்தரவும் பெற்றுப் பலர் இந்தக் காரியத்தில் சிரத்தை எடுத்துக் கொண்டு வேலைசெய்து வருகிறார்கள். அனைவருக்கும் என்னுடைய அன்பு நிறைந்த ஆசி. என்னுடைய உடல் நிலை இடங்கொடுக்கவில்லை. அந்தத் தடை இல்லாதிருந்தால் எல்லா ஊருக்கும் போய்க் கலந்து கொண்டு, பதினைந்து நாட்கள் நன்றாகக் கழித்திருப்பேன். வடை பருப்பும், பானகமும் பிரசாதமாக வாங்கி அனைவரும் ஆனந்தமாய் அன்று அனுபவிக்க வேண்டும்......''

-இப்படி எழுதுகிறார், அவர்! 'விமோசனம்' பத்திரிகையிலே கள்ளுக்கடை மறியலைப்பற்றி காரசாரமாக எழுதிய அவரது கரம் தான் இப்படி வார்த்தைகளை உதிர்த்திருக்கிறது. அணு ஆயுதங்களைக் கடலிலே போட்டுவிட வேண்டுமென்று கர்ஜனை புரிந்த ஆச்சாரியார் தான் இப்போது ராமநவமி கொண்டாடச் சொல்லுகிறார்.

நல்லவேளை—அமெரிக்க மக்களுக்கல்ல-தென்னாட்டு மூடர்களுக்குத்தான் அவர் கடிதம் எழுதியிருக்கிறார்! எல்லாம் வல்ல இராமன்-இராவணனது தலையைக் கொய்யாப் பழம் போலக் கொய்தெறிந்த இராமன்-நினைத்தால் அணு ஆயுதங்களைக் கடலிலே எறிந்துவிடலாமே! அதை விட்டு இவர் ஏன், ராய்ட்டர் மூலமாக ஐசன்ஹோவருக்குச் செய்தி அனுப்பவேண்டும்? ஆச்சாரியாரும், அவரைத் திட்டுவதுதான் எங்கள் வேலையென்று குறைப்பட்டுக்கொள்ளும் நீயும் அது பற்றி சிந்திக்கவேண்டும். ஒரு அரசியல்வாதி ஒரு வல்லரசு நாட்டிற்கு வேண்டுகோள் விடுத்தால், அது செவிமடுக்கும் என்கிற அளவுக்கு செல்வாக்கு பெற்றிருப்பதாக மனப்பால் குடிக்கும் சமாதானப் பிரியர், ஒரு 'சண்டைப் பிரிய'னும் ராமனது பிறந்த விழாவைக் கொண்டாடச் சொல்வதில் கொஞ்சமாவது விவேகம் இருக்கிறதாவென்று நீயே யோசித்துப் பார்.

ஜெகம் உள்ளவரையில் அவன் பெயரும் இருக்கவேண்டுமென்பதற்கு, இராமன் என்ன சாக்ரடீசா? சீன மக்களது சஞ்சலம் துடைத்த சன்யாட்சென்னா? அல்லது சமர் இன்றியே சுயராஜ்யம் பெற்ற காந்தியடிகளா? ஜெயந்தி கொண்டாட வேண்டிய அளவுக்கு இராமன் எந்த விதத்திலே சிறப்பு பெற்றவன்?

அவர் சொல்லும் புராணப் படியே இராமன் குலப்பெருமையும், குன்று ஒழுக்கமும் கொண்டவனாகவும் தெரியவில்லை. தசரதன் பத்தினியாகிய கௌசல்யா, பஞ்சகல்யாணிக் குதிரையை மும்முறை வலம் வந்த பின்னர் தனது கையிலிருக்கும் உடை வாளால் அசுவத்தை மூன்று துண்டாக வெட்டிக் கொன்றபின், அன்றிரவு முழுதும் அஞ்சா நெஞ்சத்துடன் குதிரையைக்கட்டித் தழுவியபடியே கிடந்தாளாம். மறுநாள் இரவு கலைக்கோட்டு முனிவர் உள்ளிட்ட வேதப் பிராம்மணர்கள் சக்ரவர்த்தியின் பட்டமகிஷியை அனுபவித்தனராம். அப்படிப் பிறந்த குழந்தைதான் ஸ்ரீராமன். ராமநவமியை கொண்டாடச் சொல்வதின் மூலம் இந்த ஆபாசத்துக்குத் தானே விழாக் கொண்டாடச் சொல்கிறார், ஆச்சாரியார்? உலகச் சமாதானத்தைக் குறித்து சிந்து பாடுபவர், இதுபோன்ற குப்பை கூளங்களைக் கிளறுவது குறித்து கேள்விப்பட்டால் மேல்நாட்டார் என்ன நினைப்பார் என்பதை உன்னுடைய முடிவிற்கே ஒதுக்கிவிடுகிறேன். அணு ஆயுத எதிர்ப்பு போன்ற மாபெரும் ஆல விருட்சங்களின் நிழலிலே நின்றுகொண்டிருக்கும் ஆச்சாரியார், ராமநவமி போன்ற பனைநிழலிலே ஒதுங்க வேண்டியது அவசியம்தானா என்பது குறித்தும் சிந்தனை செய்து ஒரு முடிவுக்கு வா.

★ தொடர்ச்சி 10-ம் பக்கம்



# தலையங்கம்

காதலிலே கவிதையிலே களம் போதும் பேச்சு;
கணவனுக்கும் மனைவிக்கும் திராவிடமே மூச்சு!

சென்னை 8—4—55 வெள்ளி

## பத்தே ஆண்டுகள்; பிரிவினைக்கு !

''தாயைக் கொலை செய்யுங்கள்; சோம்பிக் கிடக்கும் மகனுக்கு அப்போதுதான் வீரம் பிறக்கும்''—மேல் நாட்டிலே இப்படி ஒரு பழமொழி சொல்லுவார்கள். அந்த நிலையைத்தான் இந்தி வெறியர்கள் இப்போது இந்த நாட்டிலே ஏற்படுத்த முனைந்திருக்கிறார்கள்.

இந்திய சர்க்காரின் உத்தரவு ஒன்று, 1965-ம் ஆண்டு ஜனவரி 26-க்குள் சர்க்கார் ஊழியர்கள் அனைவரும் இந்தி மொழியிலே போதுமான பயிற்சி பெற்றுவிட வேண்டுமென்று கூறுகிறது. இன்னும் 1960-ம் ஆண்டிலேயே சர்விஸ் கமிஷன் தேர்வுகள் யாவும் இந்தி மொழியில்தான் நடத்தப்பெறும் என்றும் ஒரு சந்தேகம் நிலவி வருகிறது.

இது உண்மையானால் 1965-ம் ஆண்டிற்குப் பிறகு தென்னகத்திலே தமிழ் மொழியின் சவம்தான் நாற்றமெடுத்துக் கிடக்கும். அன்னையின் பிரேதத்தை இந்திக் கழுகுகள் கொத்திச் சாப்பிட ஆரம்பித்து விடும்.

இது சம்மந்தமாக காங்கிரஸ் அவைல் குழுவினரின் தீர்மானமொன்றை எடுத்துக் காட்டி, அப்படியொன்றும் அவ்வளவு விரைவில் அது நேராது என்று நிதி அமைச்சர் சுப்ரமணியனார் அபயம் கூறினாலும், வடநாட்டு 'இந்தி இட்லர்கள்'-பசுவதைத் தடுப்பு விவாதத்தின் போது டில்லி பாராளுமன்றத்திலே நேருவையே எதிர்த்து ஓட்டளித்த புருஷோத்தமதாஸ் தாண்டன்கள்—வாளாவிருப்பார்கள் என்று சொல்லிவிட முடியாது. நேருவின் வாய் குழறும் அளவுக்கு—இங்கிருந்து செல்லும் தூதுவர்களின் 'வால்' அறுபடும் வண்ணம் அந்த 'வம்பர்கள்' ஆர்பாட்டம் செய்தாலும் நாம் ஆச்சரியப் படுவதற்கில்லை.

வெள்ளைக்காரன் தன்னுடைய ஆங்கில மொழியாலேயே நம்முடைய விழியை உரித்துவிட்டான்; ஒற்றுமைத் தோணியை உடைத்து சுக்கு நூறாக்கிவிட்டான்-என அன்று தூஷணைபுரிந்தவர்கள், இன்று மொழியின் துணைகொண்டு ஒரு மாபெரும் சமுதாயத்தின் குரல் வளையை நெறிக்கப் போகிறார்கள்.

1965-ம் ஆண்டிற்குப் பிறகு இமயமுதல் குமரிவரையுள்ள இந்த நாட்டை காங்கிரஸ் கட்சிதான் ஆளுகிறது என்கிற நிலைமை மாறி, 'இந்தி வெறியர்கள்தான் இந்த மண்ணுக்கு உரியவர்கள்' என்கிற மனப்பான்மை உருவாகட போகிறது!

1965-ம் ஆண்டுக்குப் பிறகு இந்திப் பெண்ணாள் ஜெய பேரிகை தட்டுவாள்; பஞ்சடைந்த கண்களை கயல் விழியாக மாற்றிக் கொள்ள படாதபாடு படுவாள்; மற்ற பிரதேச மொழிகளிலிருந்து எடுக்கப்பட்ட மெருகு அவளது மேனியிலே பூசப்படும்; இதர மொழிக்காரர்கள், அவள் உடுத்தியிருக்கும் இரவல் ஆடைகளைக் கண்டு மனம் உருகும் நிலைமையை ஏற்படுத்திவிடுவர், அவளது பாதந்தாங்கிகள்!

பட்டாளமில்லாமலேயே 'பாரத் வர்ஷத்தை' இந்திக்காரி பவனி வருவதற்கு ஏற்பாடு நடந்துகொண்டிருக்கிறது. அரசியல் சட்டம்வேறு விழி குருடாகும்படியான அவளது நாட்டியத்திற்கு இந்த நாட்டிலே அரங்கம் அமைத்துக் கொடுக்கப் போகிறது. இந்தி ஆதிபத்யவாதிகள் எதிர்பார்ப்பதுபோல் எல்லாம் நடைபெற்றால், 1965-ம்ஆண்டுக்குள்ளாகவே பிறமொழிகளின் அழிவு வேலைகளும், இந்தி மொழியின் ஆக்க வேலையும் செவ்வனே நடைபெற்று விடும்.

இந்த அநியாயம் நடைபெற நாம் அனுமதிக்கலாமா?—என்பதுதான் இப்போது தென்னகத்து மாந்தரை-செந்தமிழ்ப் பாவாணர்களை எதிர்நோக்கி, ஈட்டி பாய்ச்சும் கேள்வி!

காங்கிரஸ்காரர்களுக்கு மட்டும் இந்தி பட்டமகிஷியாகிவிட்டால், அந்தத் தம்பதிகள் அதற்குமேல் சமுதாய விரோதிகளாகிவிடுவார்கள். சொந்த விழியினும் மொழியை ஓம்புவோர் காலராவுக்கும், பிளேக் கிருமிகளுக்கு மட்டும் பயப்பட மாட்டார்கள்-நச்சரவும், நட்டுவாக்களியும் மட்டுமல்ல அஞ்சி நடுங்கவேண்டிய பொருள்கள். இந்தியும், அவளை அணைத்து நிற்கும் 'தேசீய வீரர்'களும்தான் நாம் தீண்டத்தகாத பொருள்கள்—தீண்டிய மாத்திரத்திலேயே சாவைத் தூவும் திருநீலகண்டம்!

—இந்த உண்மையை உணர முடியாமல் மரத்துப்போன மூளையினர்தாம் 1965-க்குப் பிறகு இந்திக்கு மகுடமணிவிக்கப் போகிறார்கள்!

1965-ம் ஆண்டு இந்திக்குப் பட்டாபிஷேக விழா மட்டுமல்ல; நம் தமிழன்னையின் பிரேத விழாவும் அன்றுதான் நடைபெறப்போகிறது. நினைக்கவே நெஞ்சு கூசுகிறது! நீசக்காரியாம் இந்தி சர்க்கார் பணிமனைகளிலும், உத்யோகத் தேர்வுகளிலும் புகுந்துகொண்டு நம் அன்னையை மட்டுமல்ல; இந்த உபகண்டத்திலேயுள்ள அத்தனை பிரதேச மொழிகளையும் சுடுகாட்டுக்கு அனுப்பப் போகிறாள்.

நாம் முன்னமேயே கூறியிருக்கிறோம்.—''தாயைக் கொலை செய்தால்தான் சோம்பிக் கிடக்கும் மகனுக்கு வீரம் பிறக்கும்'' என்று! அந்தப் பழமொழி 1965-ல் பொய்யாமொழியாகப் போகிறது!

இந்தியின் வரவால் தமிழைக் கொலைசெய்து; துவண்டுபோன நம் தோளுக்கு தினவு கொடுக்கப்போகிறார்கள். தூங்கும் புலி இடிகள் அன்றுதான் கொதித்தெழும் திராவிடத்தின் முழு வன்மையையும் உணரப்போகிறார்கள். ஓடப்போகிறது இந்தி மொழி! ஓடி ஒளியப்போகிறது அதை ஏந்தி வரும் ஏகாதிபத்தியம்!

உண்மையிலேயே இந்தி வெறியர்கள் தங்களது திட்டத்தை சிதைக்காமல் நிறைவேற்றுவார்களேயானால், நாம் நிச்சயம் அறுதியிட்டுக்கூற முடியும்—அவர்களது இச்சகம் ஈடேறும் 1965-ம் ஆண்டிலேதான் நம்முடைய திராவிடநாட்டுப் பிரிவினையும் நடைபெறப் போகிறது! இந்தி பொது மொழியின் உருக்கொண்டால் டெல்லிக்கும் சென்னைக்கும், இப்போது இருக்கும் மாற்றாந்தாய் உறவுகூடக் கொஞ்சமும் இருக்காது!

இந்தி இட்லர்கள், இந்த உண்மை உணர வேண்டும். தென்னாட்டில் உருவாகும் கொந்தளிப்பின் தன்மை தெரிந்து கொள்ள வேண்டும்.

## ஆசிரியர் மு. க. உடல்நிலை.



கண் நோயின் காரணமாக கடந்த மூன்று மாதகாலமாக மருத்துவமனையில் இருந்த ஆசிரியர் மு. க. அவர்கள், இடதுகண்ணில் ஏற்பட்டிருந்த கொடிய வலி நீங்கி, இப்போது வீட்டிற்கு வந்து ஓய்வுபெற்றுக்கொண்டிருக்கிறார். அவரது உடல்நிலையைப் பற்றிய பல சந்தேகங்களுடன் தோழர்கள் ஆவல் நிறைந்த கடிதங்கள் எழுதிய வண்ணமிருக்கிறார்கள். சந்தேகப்படுவது போன்ற நிலைமை ஏதுமில்லையென்பதை அறிவிப்பதோடு, தோழர்களின் பிடிவாதம் நிறைந்த விருப்பத்திற்கிணங்க தற்போது எடுத்த அவரது படத்தையும் வெளியிட்டிருக்கிறோம்.

பரமக்குடி கார் விபத்தின் காரணமாய் கண்ணுக்குள் சிறு நரம்பில் காயமேற்பட்டு, தொடர்ந்து கூட்டங்களில் கலந்து கொள்வது, எழுதுவது போன்ற காரியங்களில் ஈடுபட்டதால் அந்தச் சிறு காயம் அதிகமாகி, 'செகண்டரி கிளாக்கோமா' என்கிற கொடிய நோயாக மாறி, பதினோரு முறை கண்ணிலே ஆபரேஷன் செய்யப்பட்டு, பாதிக்கப்பட்ட இடது கண் இப்போது பழைய நிலைமைக்கு குணமடைந்து வருகிறது. அநேகமாக கண்ணாடி அணியவேண்டிய அவசியம் ஏற்படுமென்று டாக்டர்கள் கூறுகிறார்கள். எழும்பூர் சர்க்கார் மருத்துவ மனையில் சூப்பரின்டென்ட் டாக்டர் திரு. முத்தையா அவர்கள், ஆசிரியரை மிகவும் அக்கரையுடன் கவனித்து சிகிச்சைகள் செய்தமையாலும், மற்றும் மருத்துவ மனையிலுள்ள உதவி டாக்டர்களும், தோழர்களும் செய்த உதவிகளாலும் இவ்வளவு விரைவில் நோய் நீங்கப்பெற்றிருக்கிறார் இப்போது. 'அவுட்-பேஷண்'டாக இருந்து சிகிச்சை பெற்று வருகிறார். இன்னும் ஓராண்டு காலத்துக்கு பொதுக் கூட்டங்களில் கலந்துகொள்ளக் கூடாது என்றும், சுமார் மூன்று நான்கு மாதங்கள் வெளியூர்ப் பயணங்கள் செய்யக் கூடாதென்றும் டாக்டர்கள் கண்டிப்பாய் வலியுறுத்தியுள்ளார்கள். ஆசிரியரவர்களுக்கு கடிதங்கள் எழுதியும்; நேரில் வந்தும் ஆறுதல் கூறிய நண்பர்கள் அனைவருக்கும் தன் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறார்.

## கிரேக்க......

★ 1-ம் பக்கத் தொடர்ச்சி

ஒன்றை ஏற்படுத்திக் கொண்டு, நிலக்கரியைப் போல் கருப்பு நிறம் வாய்ந்த குதிரைகள் பூட்டிய தன்னுடைய ரதத்திலே, பிரியதர்சினியை அந்தப் பித்தன் தூக்கிச் சென்று, பாதாள லோகத்திலே ஒளித்துவிட்டான்.

தீயவனின் கரம்பட்ட மாத்திரத்தில் பெர்சிபோன் 'அம்மா! அம்மா!' என்று உரத்த குரலிலே எழுப்பிய கூச்சல் ஒலிம்பஸ் மலைகளையே ஆட்டங்கொடுத்தது. நீலக் கடல் அலைகள் அவளது ஆரவாரத்தையே எதிரொலித்தன. இது கேட்ட டெமீட்டர் மீளாச் சோகத்துக்கு ஆளானுள். தலைவிரி கோலமாக, பறவையைப்போல் அலைந்து உலக முழுதும் தன் மகளைத் தேடினுள். எப்படிக் கிடைப்பாள் அவள்? அவன்தான் பாதாள லோகத்திலே, யாரும் எளிதில் புக முடியாத இடத்திலே பத்திரமாக இருக்கிருளே!

என்ணி ஒன்பது நாட்கள் புத்திர சோகத்தால் தேய்ந்துபோன டெமீட்டர் தேவாமிர்தத்தைத் தீண்டவில்லை. அமரர்கள் உண்ணும் சுவை நீராம் ரெக்ட்டர் பானத்தை அவள் திரும்பியே பார்க்கவில்லை. கடைசியாக அவள் சூரியனிடம் சென்று முறையிட்டாள்; மகளிருக்கும் இடத்தைச் சொல்லும்படி அழுது புலம்பினுள்; கண்ணீர் விட்டாள்! சூரியன் மனமிளகி பெர்சிபோன் பாதாள லோகத்திலிருக்கும் கதையையும், அங்கும் அவளைப் பார்க்க முடியாது என்கிற செய்தியையும் சொன்னுன்.

இதுகேட்டு டெமீட்டர் இடிகேட்ட நாகம் போல பதறித் துடித்தாள். உடனே, மாறுவேடம் பூண்டு, ஒலிம்பசைத் துறந்து, பூலோகத்திலேயுள்ள எலூசிஸ் என்னும் ஊருக்குக் குடி வந்துவிட்டாள்.

தண்ணீர் முகந்துவரச் சென்ற நான்கு சகோதரிகள் கிழவியைப் போல் உட்கார்ந்திருந்த டெமீட்டரைப் பார்த்து மனமிளகினர். அவள்மீது பரிதாபப்பட்டு, அவளை தங்கள் வீட்டிற்கு அழைத்துச் சென்று, தங்களுடைய கடைசிச் சகோதரனை வளர்க்கும் தாதியாக அவளை அமர்த்தினர்.

குழந்தையின் தாயாம் மெட்டனு டெமீட்டரை அருகழைத்து, உட்காரச்சொல்லி, ஒரு கோப்பை திராட்சைரசத்தை அவள்முன்னே நீட்டினுள். டெமீட்டர் அதைப் பருக மறுத்துவிட்டாள்-புத்திர வாஞ்சையால் இடிந்துபோயிருக்கும் அவள், பார்லி தண்ணீரே போதுமென்று சொல்லி அதை வாங்கிப் பருகினுள்.

நாட்கள் நகர்ந்தன. புத்திர சோகத்தைத் தணித்துக்கொள்ள அந்தக் குழந்தையையே தெய்வப் பிறவியாக்க டெமீட்டர் முடிவு செய்தாள். அந்தச் சிசுவுக்கு தினந்தோறும் தேவர்கள் உண்ணும் அமிர்தத்தை அள்ளி அள்ளி ஊட்டினுள். இரவு நேரத்தில் யாரும் அறியாவண்ணம் அந்தப் பாலகனைக் கடவுளாக்குவதற்காக நெருப்புச் சட்டியிலே வைத்து உணர்த்துவாள்.

இதை ஒரு நாள் குழந்தையின் தாயார் மெட்டனீரு கவனித்துவிட்டாள். அவ்வளவுதான் தாமதம்! நெருப்பின்மீது குழந்தை இருப்பது தெரிந்ததும், தன் மழலை தெய்வமாகப்போவது தெரியாத அந்த மாதா 'ஓ'வென்று அலறி [illegible] ஒரு நொடியில் [illegible]

காக அந்தக் குழந்தையை மண்ணிலே அறைந்தாள். ஆனல் தப்பித் தவறி அந்தக் குழந்தை மண்ணிலே விழாமல், அவள் மடியிலேயே சிக்கிக்கொண்டது. பாவம், டெமீட்டரின் முயற்சி பலிக்கவில்லை. அந்தக் குழந்தை ஆண்டவனுகும் சந்தர்ப்பத்தை இழந்தது! கோபமடைந்த டெமீட்டர் தான் சாதாரணப் பெண் அல்லவென்றும், தான் தெய்வமென்றும் கூறி, தனக்கு ஒரு கோயில் தேவையென்று கூறி மறைந்துவிட்டாள்.

எலூசிஸ் என்னும் அந்த ஊரில் விரைவில் கோவிலொன்று எழுந்தது. டெமீட்டருக்கு இன்னும் தன் மகளை இழந்த கவலை மறைந்துவிடவில்லை. அவளும் ஒலிம்பசை விட்டு, அந்தக் கோவிலிலேயே குடியேறினுள்.

டெமீட்டருக்கு இன்னல் வந்த காரணத்தால் அந்த ஆண்டு தூவிய விதைகள் யாவும் விதைகளாகவே காட்சியளித்தன; மொட்டுகள் விரியவில்லை; பூலோகத்தில் பச்சை வர்ணமே இல்லாமல் அழிந்துவிட்டது; எங்கு பார்த்தாலும் பஞ்சமும், பட்டினியும் தாண்டவமாடியது. மனித இனமே பூண்டோடு அழிந்துவிடுமோ என்று தேவர்கள் யாவரும் அச்சப்பட்டார்கள். தேவர்கள் தலைவனும் சீயசுக்கு இந்தச் செய்தி கொண்டுபோகப் பட்டது. சீயஸ் ஒவ்வொரு கடவுளாக டெமீட்டரிடம் தூதனுப்பி, தொல்லை நீக்கி அருள் புரிய வேண்டுமென்று கேட்டுக்கொண்டான். ஆனல் டெமீட்டரோ தன் புதல்வி இல்லாத ஒலிம்பசுக்கு திரும்பமாட்டேன் என்ற சபதம் செய்தாள்; பெர்சிபோனைப் பார்க்காதவரையில் பூமியிலே ஒரு புல் பூண்டுகூட முளைக்க விடமாட்டேன்-என்று கர்ஜனை புரிந்தாள்.

டெமீட்டரின் பதில் கேட்டு சீயஸ் திகைத்துவிட்டான். மனித இனம் அழிந்துவிடுமோ என்று சஞ்சலப்பட்டான். உடனே ஹெர்மஸ் (மெர்க்குரி) என்னும் தேவதூதனை பாதாள உலகத் தலைவனிடம் அனுப்பி, உடனே பெர்சிபோனை திருப்பித் தந்துவிடும்படி ஆணை பிறப்பித்தான்.

தேவேந்திரனுடைய கட்டளையை யார்தான் மீற முடியும்? உடனே பெர்சிபோனை அருகழைத்து, "ஆருயிரே! பூலோகம் சென்றதும் என் நினைவாகவே வாடும் இந்த ஏழையை மறந்து விடாதே. உன்னுடைய கணவன் தேவர்களிலே உயர்ந்தவன் என்ற எண்ணத்தையும் அகற்றிவிடாதே" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். அவன் கண்கள் நீர்வீழ்ச்சியாயின. அவளுடைய மோவாய் பிடித்து, "என் இன்பமே! இதோ உன் அத்தான் அளிக்கும் இந்த மாதுளை மணியை ஏற்றுக்கொள்" என்று சொல்லியபடியே ஒரு மாதுளை விதையை அவளது வாயிலே ஊட்டினுன். அவளும் தடையேதும் சொல்லாமல் அதை விழுங்கிவிட்டாள். பாவம்! பேதைதானே அவள்; பாதாள அரசன் தந்த மாதுளை மணியை விழுங்கியோர், மீண்டும் அவனிடம் வந்து சேரவேண்டும்- இந்த நியதியை எந்த சீயசின் கட்டளையும் மாற்ற முடியாது—என்கிற உண்மை பெர்சிபோனுக்குத் தெரியவில்லை!

தூதுவனேடு தன் தாயிடம் திரும்பினுள், அந்தத் தையல்! மகளை மார்புறத் தழுவி, முத்தங்களைப் பதித்து இன்புற்று மகிழ்ந்தாள், டெமீட்டர்! ஆனுலும் அந்த மகிழ்ச்சி நிலைத்து நிற்கவில்லை. பாதாள அரசன் தந்த மாதுளை விதையை விழுங்கியது கேட்டு டெமீட்டர் சிலையானுள். அந்த விதையை உட்கொண்டால் எந்த ஆணையும் தன் மகளை அதிக நாட்கள் தன்னிடம் வைத்திருக்க முடியாதே; மீண்டும் பாதாள லோகத்துக்கே அந்த மாதுளை அவளைக் கொண்டு போய்விடுமே-என்பது தெரிந்து டெமீட்டர் ஒப்பாரி வைக்க ஆரம்பித்துவிட்டாள்!

மீண்டும் டெமீட்டர் சோகத்தின் சொந்தக்காரியானது கேட்டு சீயஸ் சித்தம் சோர்ந்தான். தனது அன்னையும் கடவுளர்களிலே மூத்தவருமான ரியாவை அவள்பால் தூதனுப்பினுன். ரியாவைக் கண்டதும், தன்னுடைய கோவிலில் இருந்தபடியே கதவடைத்துக் கொண்டாள். இருந்தாலும் ரியா வெளியிலிருந்தபடியே தனது கோரிக்கையை வெளியிட்டாள்.

"டெமீட்டர்! என தன்புத் திருமகளே! பெர்சிபோன் மாதுளை விதையை சாப்பிட்டதால் அவள் எப்படியும் பாதாள அரசனிடம் போய்த்தான் ஆகவேண்டும். அந்த நியதியை யாராலும் மாற்ற முடியாது. இருந்தாலும் உனக்காக ஒரு எற்பாடு செய்திருக்கிறேன். வருஷத்தில் ஒரு சில மாதங்கள் உன் மகள் உன்னிடமே இருப்பாள். சில மாதங்கள், அவள் பாதாள வேந்தனிடம் இருக்கட்டும்"—இப்படி ரியா கேட்டுக்கொண்டாள். என்ன செய்வது? ஆதிக் கடவுளின் பேச்சை மறுக்க முடியுமா? டெமீட்டர் அந்தக் கோரிக்கைக்கு இணங்கிவிட்டாள். அதன்படியே கோடைக் காலத்தில் பெர்சிபோன் பாதாள லோகத்துக்குப் போய் விடுவாள். அந்த மாதங்களிலேதான் பயிர் விளைவதில்லை; வயல்கள் யாவும் வெடித்துவிடுகின்றன! மாரிக்காலத்திலே பெர்சிபோன் தன் அன்னையிடம் திரும்பி விடுவாள். டெமீட்டர் தன் மகளோடு மகிழ்ச்சியில் ஆழ்ந்திருக்கும் அந்த நேரத்திலே பூமி பச்சைப் பட்டாடை உடுத்தி பாங்குடன் திகழ்கிறது!

இதுதான் டெமீட்டர் புராணம்! இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு நூற்றுண்டுகளுக்கு முன்பு செப்டம்பர் மாதத்திலே டெமீட்டர் தன் மகளை அடைந்த திருவிழா எலூசிஸ் நகரத்திலே விமரிசையாகக் கொண்டாடப்படும்! விழா விமரிசையாக நடக்கும் அந்த ஐந்து நாட்களிலும் கிரேக்கநாடு குதூகலத்திலே ஆழ்ந்திருக்கும்!

இது இருபதாம் நூற்றுண்டு—பகுத்தறிவு பரவியிருக்கும் காலம்! இப்போது அங்கே டெமீட்டர் திருவிழா கிடையாது! எலூசிஸிலே உள்ள கோவிலும் இருந்த இடம் தெரியவில்லை!

ஒவ்வொரு ஆண்டும் செப்டம்பர் மாதம் வரும்; போகும். ஆனல் டெமீட்டரைப் பற்றிய நினைவே வருவது கிடையாது! அவளைப் பற்றி செல்லரித்துப் போன பழைய ஏடுகளைப் புரட்டினுல் தான் தெரிந்து கொள்ள முடியும்!

(தொடரும்)

## கடல் கடந்தோர் கடிதம்

### சிங்கப்பூர்

அன்புடையீர்,

தற்பொழுது இம்மலேயா நாட்டில் தமிழ் மொழிக்கேற்பட்டுள்ள இழுக்கைத் தாங்கள் அறிவீர்கள் என்றே எண்ணுகிறேன். இருப்பினும் யானும் தெரிவிக்க விரும்புவதோடு, தங்கள் உறுதுணையையும் நாடுகிறேன்.

அறிஞர் தனிநாயகம் அடிகளாரின் அரும் முயற்சியாலும்; மற்றுமுள்ள மலேயா தன்மானத் தமிழர்களின் முயற்சியாலும், மலேயா பல்கலைக் கழகத்தில் தமிழ் பகுதி பெறப்பட்டது. ஆனல், உழைப்பவர் பலர்; உண்டு களிப்பவர் ஒருவர் என்ற தன்மைக்கேற்ப, பல்கலைக் கழக தமிழ் பகுதிக்கு, செத்த மொழியான சமஸ்கிருத மொழியின் புத்தகங்களை அன்பளிப்பாக அளித்துள்ளது நம் இந்திய அரசாங்கம். என்னே, நம் இந்தியத் தலைவர்களின் எண்ண எழுச்சி! பல்கலைக் கழகத்தில் இருப்பதோ தமிழ்ப் பகுதி. அங்கு அடுக்கி வைக்கப் பட்டுள்ளதோ சத்தற்ற சமஸ்கிருத புத்தகங்கள்!

மலேயாவில் இந்தியர் பெயரில் வதிபவர்களின் எண்ணிக்கை ஆறு இலட்சம்; அதில் தண்டமிழ் மொழியான தமிழை, தாய் மொழியாகக் கொண்டு வதிபவர் எண்ணி ஐந்து இலட்சம். ஆகவே எத்தன்மைத்தாகிலும் சமஸ்கிருதம் இந் நாட்டிற்கேற்றதல்ல. ஆகவே ஆரியர்களின் அக்ரமச் செயல்கள் இந்தியாவில் மட்டுமன்றி; மற்றைய வெளிநாடுகளிலும் தலைவிரித்தாட முயல்கிறது என்பதற்கோர் [illegible] இச் செயல்.

தூங்கிய திராவிடர்கள் விழித்துக் கொண்டனர், திராவிட அறிஞர்களின் உரை கேட்டு.

ஆகவே இச் சிங்கை மாநகரில் சிறப்புடன் ஒலிக்கும் "தமிழ் முரசு" பத்திரிகை இச் செயலைக் கண்டித்ததோடன்றி, சிறந்ததொரு சீரிய தொண்டினையும் செய்ய முன்வந்துள்ளது. ஆகவே அத் தொண்டிற்கு உற்ற துணை புரிய வேண்டியது என்போன்ற தன்மான இளைஞர்களின் கடமையாகும். ஆகவே, நாங்கள் நிறுவியுள்ள "பகுத்தறிவு நாடக மன்றம்" தமிழ் காக்க முன்வந்துள்ளது. தங்களின் 'நச்சுக்கோப்பை' எனும் நாடகத்தை நடிக்க ஏற்பாடு செய்துள்ளோம். ஆதலால தாங்கள் இவ்விடத்திலே வேறு யாருக்காவது இந் நாடகத்தை நடிக்க உரிமை கொடுத்திருப்பினும் (யாருக்கும் கொடுக்கப்படவில்லை என்றே எண்ணுகிறேன்) பொருட்படுத்தாது, எங்கள் மன்றத்திற்கும் உரிமை அளிக்குமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன். இந் நாடகத்தில் வசூலாகும் பணம் முழுவதையும் 'தமிழ் எங்கள் உயிர்' என்பதற்கே கொடுக்கப்படும். இதற்கென்றே தங்கள் நாடகத்தை நடிக்க முன் வந்துள்ளேன். ஆகவே தமிழ்த் தாயைக் காக்க, தங்களின் இந் நாடகத்தை நடிக்க உரிமை அளித்து, உறுதுணை புரிவீர்கள் என்று எண்ணி என் கடிதத்தை முடிக்கின்றேன்.

இங்ஙனம்,
ச. வரதன்,
செயலாளர்.



# புலியும், புள்ளிமானும்!

[ மாறன், பி. ஏ. (ஹானர்ஸ்) ]

> அவன் துணிவின் சிகரம்; கற்பனு சாகரம்; போரிலே புலி! ஆனுலும் அந்த வரிவேங்கைப்புலி ஒரு புள்ளிமானிடம் காலமெல்லாம் அடிமைப்பட்டிருந்தது.
>
> துப்பாக்கிச் சனியன்கள் துளைக்க முடியாத அவனது இதயத்தை, துடியிடையாள் ஒருவள் துளைத்துவிட்டாள்—மீளாத துன்பத்திற்கு ஆளாக்கிவிட்டாள்!

நெருப்பாறு, நீர்வீழ்ச்சியா?—இவைகளில் எதைக் கடக்க வேண்டும்? ஒரு நொடியில் அவனுடைய சைன்யம் பாலமில்லாமலேயே பாதை கண்டுவிடும்.

வாலிபன்தான் அவன்; ஆனுலும் அவனது வல்லமைகண்டு வல்லரசு நாடுகள் யாவும் பீதி கொண்டன. பேய்க்கும் பிசாசுக்கும்கூட அவர்கள் அவ்வளவு அச்சம் கொண்டது கிடையாது. 'நெப்போலியன்' என்ற வார்த்தை காதில் பட்டதுமே அகில ஐரோப்பாவும் அக்கினியை மடியிலே கட்டிக் கொண்டதைப்போல அலறித் துடித்தது.

நாடு கவருவதுதான் அவன் கொண்ட நோக்கம்; அதிகாரம் தான் அவனது ஆருயிர்க் காதலி; மண்டிலங்களைக் கைப்பற்ற வேண்டுமென்பதற்காக இலட்சோப லட்சம் பிரெஞ்சு நாட்டு வாலிபர்களின் இரத்தத்தை யுத்த வெறிக்காக சத்தம் செய்திருக்கிறுன்.

"என் ஆட்சிக்கு இணங்க மறுக்கும் இட்டாலி நாடா? பிணக் குவியல்களிடையே உன்னைக் கைப்பிடிக்கிறேன்"—என்று கர்ஜனை புரிந்தான்.

தூரத்திலே இருக்கும் எகிப்தா? அருகிருந்து ஆர்ப்பரிக்கும் ஸ்பெயினு?—அவையெல்லாம் அவன் வாள் தூக்கு முன்னரே அவன் கழுத்துக்கு வாகைமாலை சூட்டின.

அவன் பேச்சிலே வேகம் நிறைந்திருந்தது; வீரம் அவன் தோளிலே அமர்ந்து 'சமரா? சரணுகதியா?' என்று தொகையரு பாடியது.

புறங்கை கட்டி, வான் நோக்கி வளர்ந்திருக்கும் குன்றிற்கு, நடை கற்றுக் கொடுக்கும் அவன் அசைவுகள்—பார்த்த மாத்திரத்திலேயே பராக்கிரமசாலிகளையும் புறமுதுகிடச் செய்யும் அவனது பார்வை—அவைதான் அவனது வெற்றியின் ரகசியங்கள். "கூர் மழுங்காத ஆயுதங்களால் அல்ல; அதனினும் கூரிய என் கண்களாலேயே நான் பல போர்முனைகளிலே வெற்றி பெற்றிருக்கிறேன்"—என்று அவன் ஒருமுறை சிம்மக் குரல் கிளப்பியிருக்கிறுன். ஐரோப்பாக் கண்டம் முழுவதிலுமே போர்ப்படுகுழியை வெட்டி, அதிலே பட்டாள வீரர்களின் தலைகளையும், எலும்புத் துண்டுகளையும் மலையெனக் குவித்து, ஆனந்தக் கூத்தாடியவன் புஜபலபராக்கிரமத்தால் அல்ல; நயன அசைவுகளாலேயே எதிரிப் படைகளை—இரணகளசூரர்களை—நடுங்க வைத்திருக்கிறுன் என்பது பேராச்சரியங்களிலே ஒன்று! உலக அதிசயங்களிலே தலையாயது!

அவன், துணிவின் சிகரம்; கற்பனு சாகரம்! 'அவனுடைய சக்தியை மண், நீர், தீ, காற்று, வான்-ஆகிய ஐம்பெரும் பூதங்களின் சக்தியோடுதான் ஒப்பிட வேண்டும்' என்று அறிஞர்கள் பலர் அபிப்பிராயம் தெரிவிக்கின்றனர்.

அவனுக்கு உவமைகூற வேண்டுமானுல், மின்மினிப் பூச்சியைப் போல போர்க்களத்திலே தோன்றி மறையும் யுத்த இயந்திரங்களைச் சொல்ல முடியாது—வரலாற்றுச் சுவடியின் இரண்டொரு பக்கங்களிலே அவன் வந்து போனுலும், அந்த ஏடுகளை, படிப்போர் பிரமித்துப் போகும் உயர் காவியமாக்கிவிட்டான், நெப்போலியன்! பிணநாற்றத்திலே பூநாற்றம் கண்ட அலெக்சாண்டரைத்தான் அவனது போர்த்திறமைக்கு நிகராகச் சொல்ல வேண்டும்! இரத்தத் தடாகத்திலே ஜலக்கிரீடை செய்து பழக்கப்பட்ட செங்கிஸ்கான் தான் அவனுக்கு ஒப்பான சேனைத் தலைவன்!

அவனது வீரதீரச் செயல்களைப் படிப்போர் நெப்போலியனை 'ஒரு மகா புருஷனென்று அழைக்கின்றனர். கர்மவீரனென்ற அடைச் சொல்லை சேர்க்கலாமா என்று விழைகின்றனர். இருந்தாலும் அந்த மகா புருஷனிடம் சாதாரண மனிதனுக்குள்ள இச்சைகள் நிறைந்திருக்கின்றன. அவன் பேராற்றல் மிக்கவன்தான்: ஆனல் அவனிடம் பேராசையும் அளவுக்குமீறி இருந்திருக்கிறது!

நெப்போலியன் போரிலே புலி; ஆனுலும் அந்த வரி வேங்கைப்புலி ஒரு புள்ளிமானிடம் காலமெல்லாம் அடிமைப்பட்டிருந்தது!

துப்பாக்கிச் சனியன்கள் துளைக்கமுடியாத அவனது இருதயத்தை, துடியிடையாள் ஒருவள் துளைத்துவிட்டாள்; மீளாத் துன்பத்துக்கு ஆளாக்கிவிட்டாள்!

ஜெகம் புகழும் அந்த மாவீரனை, மனதைக் கவர்ந்து, மடியிலே வீழ்த்தி, தலையைக் கோதிவிட்ட பூங்கொடி யார் தெரியுமா? ஜோசப்பைன்.

அவள் அப்படியொன்றும் பிரமாதமான அழகியல்ல; மெச்சத் தகுந்த நடத்தைக்காரியுமல்ல! நெப்போலியனைவிட ஆறு வயது மூத்தவள்; விதவை; இவனை மணக்கு முன்னரே அவள் இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகியிருந்தாள்; இன்னும் சொல்லப்போனுல் அவளுக்குக் கொஞ்சம் சொத்தைப் பற்களும்கூட!

அப்படிப்பட்ட வனிதையைத்தான் நெப்போலியன் தன்னுடைய வாழ்க்கைத் துணைவியாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டான். போர் வீரனுக்குக் குடும்ப வாழ்க்கையைக் கவனிக்க நேரமேது? பைபிளுக்கு நேராகச் சத்தியம் செய்து, ஜோசப்பைனைக் கைப்பிடித்த நாற்பத்தி எட்டு மணி நேரத்திற்குப் பிறகு, அவன் இத்தாலியின் பனி மூடிய பிரதேசங்களை நோக்கி தன் படைகளை நடத்திச் செல்லவேண்டியிருந்தது! பாவம்; காதல் செய்யக்கூட அந்தக் காளை நிகர்த்தவனுக்கு நேரம் கிடைக்கவில்லை.

"ஹான்னிபால் என்னும் மாவீரன் ஆல்ப்ஸ் மலைத்தொடரை ஆடவைத்திருக்கிருனும்; நாமோ இப்போது ஆல்ப்ஸ் மலையையே திசை மாற்றித் திருப்பி வைத்துவிட்டோம்"—தென்றலிசையிலே தேன்மொழியோடு தெம்மாங்குபாட

★ தொடர்ச்சி 8-ம் பக்கம்

## புழுங்கிச் சாகிருர், பிரகாசம்!

கர்நூலிலே பிரகாசம், தான் இதுவரை வசித்து வந்த முதன் மந்திரி பங்களாவை காலி செய்துவிட்டு, இப்போது ஓங்கோல் போயிருக்கிருர். பாவம்! அவரது வாழ்க்கையிலே இது எவ்வளவு பெரிய ஏமாற்றம்! இதை அவர் எப்படித்தான் தாங்கப் போகிருரோ, தெரியவில்லை. தான் செத்தபிறகுகூட, தன் சவம், முதன் மந்திரி வாசஸ்தலத்திலிருந்தபடிதான் சுடுகாட்டுக்குச் செல்ல வேண்டுமென்று அவர் கண்ட கனவெல்லாம் மண்ணுகிவிட்டது!

ஆனுலும் இந்தக் கிழவர் இன்னும் நம்பிக்கை இழக்கவில்லை. அவருடைய அந்தரங்க சீடர் தென்னேட்டி விசுவநாதம் இப்படி வாக்குமூலம் தந்திருக்கிருர்:

"பிரகாசத்தை யாரும் அவருடைய நிலையிலிருந்து அசைக்கமுடியாது. இப்போது அவருக்கு நேர்ந்திருக்கும் நிலைமையை எதிர்த்து அவர் பொதுமக்கள் ஆதரவைத் திரட்டிவிட முடியும். அவருடைய பெயரை உபயோகித்து காங்கிரஸ் பெற்ற வெற்றியை இப்போது பாதுகாத்துக் கொள்ள முயலவேண்டும். அதற்கு ஆந்திர அரசியலில் அமைதி தேவைப்படுகிறது. அந்த அமைதியைக் கலைக்க வேண்டாமென்பதற்காகத்தான் பிரகாசம் மௌனமாக இருக்கிருர்"

—இதன் உட்கருத்து புரிகிறதா? பிரகாசத்திற்கு தலை நிரைத்திருக்கலாம்; ஆனுலும் அவரைக் கப்பியிருக்கும் பதவி ஆசை மட்டும் இன்னும் நிரைத்தபாடில்லை. ஆந்திர வனத்திலே சுறுசுறுப்போடு உலவும் கோபால ரெட்டி போன்ற 'கற்றுக்குட்டி'கள், நாடி தளர்ந்துபோன அந்த கிழட்டுச் சிங்கத்தைக் கவனிக்க மறந்துவிட்டனர்.

சமயம் பார்த்திருக்கிருர், பிரகாசம்! ஆந்திர மண்ணில் விரைவிலே பதவி குறித்து பூகம்பம் ஏற்படப்போகிறது. மீண்டும் கோட்டைக்குள்ளே குத்து, வெட்டுகள்; குழப்பங்கள்!

அய்யா, ஆந்திர கேசரியாரே! புத்தபிரான் உம்போன்றவருக்காகத்தான் ஆசையை ஒழிக்கவேண்டுமென்று உபதேசம் செய்தாரோ, என்னவோ!

# தாரையின் கனவு

பூமுவைப் போல வளைந்து செல்லும் காவிரி ஆறு குடந்தையிலே ஒரு பெரிய கலைக்கூடத்திற்கே அரணாக இருந்தது. முயல் குட்டியைப் போல துள்ளிக் குதித்தபடியே, பாலத்தின் கீழே ஓசை கிளப்பி ஓடும் காவிரி நீரில், தங்கள் நிழலைப் பார்த்தவண்ணம் மாணவர்கள் கல்லூரிக்குச் செல்வார்கள்.

தென்னாட்டுக் கேம்பிரிட்ஜாம்-அந்தக் கல்லூரி–அதிலே தான் நான் படித்துவந்தேன். கெட்டிக்கார மாணவி என்று பெயர் வாங்காவிட்டாலும், அந்தக் கல்லூரியிலேயே மிகவும் அடக்கமான பெண் என்கிற பெயரை விரைவிலேயே தட்டிப் பறித்துக் கொண்டேன். 'டேய், அதோ பார் ஆமை!'—என்று மாணவர்கள் குறும்பு பேசுவார்கள். 'குப்' பென்று சிவக்கும் என் கன்னங்களைக் கைக்குட்டையால் மூடியபடியே நான் வேறு பக்கத்துக்கு நழுவிவிடுவேன்.

ஆமையாம்; நான் அடக்கமான பெண்ணும்! கையிலே 'பிளாஸ்டிக்' பை கிடையாது; மணிக்கு ஒரு தரம், வானவில்லைப் போல உடை மாற்றும் வழக்கம் இல்லை; இவையெல்லாம் மாணவர் உலகம் எனக்குத் தந்த மதிப்புக் குறிப்புகள்!

"காதல், காதல் என்கிருர்களே, அந்தப் புத்தகத்தின் அரிச்சுவடி தெரியுமாடி, உனக்கு?"—என்று என் முந்தானையைப் பிடித்திழுத்தபடியே காந்தா என்னைப் பார்த்து கேள்விக் குறியை கிளப்புவாள்.

"அந்தக் கேள்வியை பாவம், தாரவைப் பார்த்துக் கேட்கிருயே; அதோ இருக்கிருளே ஜூலியட், அவளைப் பார்த்துக் கேள்"—என்று சிந்தாமணியைப் பார்த்து சிரிப்பாள்; என் கழுத்தைக் கட்டிக் கொண்டு தொங்குவாள், சாந்தா!

காதல் உணர்ச்சியைப் பற்றிக் கவலைப்படாதவளாம், நான்! என் தோழிகள் என்னைப் பற்றி அப்படித்தான் நினைக்கிருர்கள். என்னைப் பற்றி நினைக்கும்போது எனக்குக் கூட ஆச்சரியமாக இருக்கும். ஆண்கள் கூட்டத்திலேயே அலைந்து கொண்டிருக்கிறேன். இருந்தும் ஒரு ஆண் மகனுவது இன்னும் என் உள்ளத்தில் குடியேறவில்லையே! தண்ணீரிலேயே வாழ்ந்தும் தண்ணீர் பருகாத மீனுகவல்லவோ நான் வாழ்கிறேன்!—இந்த நினைப்பு எனக்குக் கசப்பாகத்தான் இருந்தது.

* * *

ஜூலை மாதம். அன்றுதான் நான் முதன் முறையாகக் கல்லூரியிலே காலெடுத்து வைத்தேன். கல்லூரியிலே எப்படிப் பழக வேண்டுமென்று என் தந்தையார் சொல்லிச் சென்ற அறிவுரைகளை நினைத்தபடியே காவிரிக் கரையின் ஓரத்திலே நடந்துகொண்டிருந்தேன். என்னைப் பார்க்கும் ஆடவரெல்லாம், ஒருமுறைக்கு மறுமுறை பார்த்து, கண்களுக்கு விருந்து பெற்றுச் செல்வர்; நான் நாணத்தால் நிலம் நோக்கவேண்டிய அளவுக்கு தங்கள் பார்வை பாணத்தை என்மீது பூட்டுவர்.

ஆனல் நுரை கக்கிச் செல்லும் பொன்னி ஆருே என்னைப் பார்த்து நிற்கவில்லை; என்னை நாணும்படிச் செய்யவில்லை. வழக்கம் போலவே ஓடிக்கொண்டுதான் இருந்தது. அன்று முதல் எனக்கு தொல்லைகொடுக்காத காவிரிக் கரை மாலைப் பொழுதுக்கு ஏற்ற துணையாகிவிட்டது. ஆற்று மணற் படுக்கையிலே விழுந்து புரளுவேன். புன்னை மரச்சோலையிலிருந்து பூரிப்பால் இன்னிசை பொழியும் குயிலினங்களை என் அகக்கைகளால் தடவிக்கொடுப்பேன். தென்னைமரத்துப் பொன்னூசல் ஆடும் கிளிகள் என் முத்தங்களைப் பெற்று பறந்து போகும். பொன்னி நதி தீரம்தான் மாலை நேரத்திலே எனக்குக் கிடைத்த புகலிடம்!

தென்றலிலே சேலை பறப்பது கூடத் தெரியாமல் அன்று நான் வெகுதூரம் சென்றுவிட்டேன். அங்கே உயரமான கட்டிடம் ஒன்று என் கவனத்தைக் கவர்ந்தது. பக்கத்திலே சென்று பார்த்தேன்.

* * *

ஒரு ஆள் உயரத்துக்கு, அகலமான ஒரு கண்ணுடி ஜன்னல். அதற்கு உள்ளே ஒரு பெரிய மேஜை. அதிலே பல விஞ்ஞான கருவிகள். அதிலே ஓர் உருவம்—ஆண் உருவம்தான்!-உட்கார்ந்தபடியே ஏதோ எழுதிக் கொண்டிருந்தது.

தென்னைமரத்து ஓரத்தில் நின்றபடியே உள்ளே நிகழ்ந்தவைகளை கவனித்துக் கொண்டிருந்தேன். ஆகா; எவ்வளவு அழகான வாலிபர், அவர்! அவரைப் பார்த்ததும், மின்னலைப் பார்ப்பதைப்போல என் கண்கள் கூசின. சிக்கு பிடித்த கருப்பு நூலைப் போல நெற்றியிலே வந்து விழும் கரிய கேசம்—அதை ஒற்றைக் கையால் தாக்கிவிட்டபடியே இன்னொரு கையால் பேனா பிடித்தெழுதும் அந்தப் பெருமிதத்தை என்னென்பேன்! பாவம்; ஏதோ வெகு மும்முரமாக வேலை செய்துகொண்டிருந்தார். நான் கண்ணுடி ஜன்னல் வழியாக அந்தப் பேருருவத்தைத் தரிசித்துச் சென்றது அவருக்குத் தெரியவேயில்லை.

* * *

மறுநாள்—மேற்கு சிவப்பாகு முன்னமே நான் ஆற்றங்கரையை நோக்கி கைகளை வீசி வீசி நடக்கலானேன். வழக்கம்போல் அந்தத் தென்னைமரத்துக்குப் பக்கத்திலே நின்றுகொண்டேன்—இன்றும் அவர் எழுதிக்கொண்டேதான் இருந்தார். ஆனல் ஒரு மாற்றம். கொஞ்சம் யோசனை செய்து எழுதினர். ஆ! அதோ அவர் தலையைத் தூக்கி என்னைப் பார்த்துவிட்டார்! அந்தப் பார்வையிலேதான் என்ன கம்பீரம்; என்ன கவர்ச்சி!

எனக்கு மூச்சு நின்றுவிடும்போல் இருந்தது. நாணற்காட்டின் பக்கத்திலே மேய்ந்துகொண்டிருக்கும் மீன்குஞ்சுகளைப் பார்ப்பதைப் போல நான் முகத்தைத் திருப்பிக்கொண்டேன்.

சிறிதுநேரம் கழித்து மீண்டும் நான் ஜன்னலை உற்று நோக்கினேன். இப்போது அவர் என்னைக் கவனிக்கவில்லை; எழுதிக்கொண்டிருந்தார். அதோ, மீண்டும் அவர் என்னைப் பார்க்கிருர்; ஒரு முறுவலும் பூக்கிறது, அவர் முகத்திலே! என்னுல் அதற்குமேல் அங்கு நிற்க முடியவில்லை. துள்ளிக் குதித்து ஓடிவிட்டேன்.

* * *

நான்தான் ஓடினேனேயன்றி என் உள்ளத்தில் புகுந்துகொண்ட அவர் ஓடவில்லை; அரசமரத்துப் பிள்ளையாரைப் போல் உட்கார்ந்து கொண்டார்.

என் உள்ளத்திலே புதுப்புது உணர்ச்சி ரேகைகள்—உல்லாசக் கோடுகள்! இரவு ஏன் வந்தது என்கிற நிலைமை எனக்கு!

படுக்கையிலே உடலைச் சாய்த்தேன். தூக்கமா வரும், எனக்கு! அப்பப்பா; எத்தகைய இன்பக் கனவுகள்! அவர் மட்டும் என் கணவராகிவிட்டால்...?—சே,சே! இந்தப் பெண்கள்தான் எவ்வளவு அவசரக்காரிகள்! இன்னும் அவர் பெயரென்றே தெரியவில்லை. ஊர் பேர்கூட சரியாகத் தெரியாது. அதற்குள்ளாகவே என் மனம் உரிமை கொண்டாடுகிறதே!

அன்றைய இரவுதான் முதன் முதலாக சங்க நூற்களிலே வந்துபோகும் காதற் தலைவியரின் அனுபவங்களைப் பெற்றேன். உம்... அவர்களுக்காவது தலைவனிடம் தூதனுப்ப தோழியர் இருந்தனர்; பறவைகள் இருந்தன. பேசாமடந்தையாகிய எனக்கு அப்படியெல்லாம் உறவு உண்டாக்கித்தர யார் இருக்கிருர்கள்?

* * *

"ஏன் இல்லை? இதோ நான் இருக்கிறேன்"—என்று முணகியபடிதானே என்னவோ, மறுநாள் மாலை நான் தென்னை மரத்துக்குப் பக்கத்தில் அடியெடுத்து வைத்தபோது கிழவனொருவன் என் அருகே வந்தான். "வா, அம்மா! அய்யா பி. எச். டி பட்டம் வாங்குவதற்காக சோதனை செய்துகொண்டிருக்கிருர். தாராளமாக உள்ளே வாம்மா."—என்று கடகடவென்று அவன் யாரோ சொல்லிக் கொடுத்ததை ஒப்புவித்தது போல ஒப்புவித்தான்.

எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. எனக்கு முன்பாகவே கிழவன் கதவுகளைத் திறந்து வழிகாட்டினன். நானும் நடுங்கிக்கொண்டே உள்ளே நுழைந்தேன். 'வணக்கம்' என்ற ஒலியோடு 'அவர்'-என் உள்ளம் தழுவியவர்—என் எதிர்காலக் காதலன்—என் கனவிலே வந்து என் கன்னத்தைப் புண்ணுக்கிய கோமகன்—உட்கார்ந்தபடியே வரவேற்ருர். நானும் நடுங்கியபடியே–நெற்றியிலே வழிந்த வியர்வையை கைக்குட்டையால் துடைத்துக்கொண்டு உட்கார்ந்தேன்.

ஒரு பெரிய மேஜை-அது தரையைத் தொடும் அளவிற்கு வெல்வெட் துணியால் மூடப்பட்டிருந்தது. மேஜை மீது வைக்கப்பட்டிருந்த பூங்கொத்திலே சிறு சிறு வண்டுகள் மொய்த்துக் கிடந்தன. அவர் உட்கார்ந்தபடியே அறையிலுள்ள விஞ்ஞானக் கருவிகளின் பெயர் சொல்லி, விரல்களினுலேயே அவைகளைச் சுட்டிக் காட்டினுர். நானும் நயனபாஷையாலே அதை ஆமோதித்தேன்.

எங்களது அன்றைய சந்திப்பு சாதாரண அறிமுகங்களோடு முடிந்துவிட்டது. அந்த இன்பலோகத்துக்கு மறுநாளும் நான் போகாமலிருப்பேனு, என்ன? நாளைய கணவனை நான் நாளெல்லாம் சந்தித்து வந்தேன். அடுத்தடுத்து என் அன்பருடன் நடந்த நிகழ்ச்சிகளை நான் சொல்லமாட்டேன்—எனக்கு வெட்கமாக இருக்கிறது. இதோ என் டயரி; அது சொல்லும், அந்த இன்ப நிகழ்ச்சிகளை!

* * *

ஜூலை 16

என் கண்ணுளன் உட்கார்ந்த இடத்தைவிட்டு எழுந்திருப்பதேயில்லை. 'இந்தப் படத்தைப் பார்த்தாயா? அணுக்களை இப்படித்தான் பிரித்தெடுக்கிருர்கள்'—என்று வர்ணித்துக்கொண்டே போனுர். நானும் படம் பார்ப்பதற்காக—அவரது விஞ்ஞானச் சொற்பொழிவைக் கேட்பதற்காக—அவர் அருகே சென்று உட்கார்ந்தேன். அவர் படங்களை விளக்கும் வேகத்திலே என்னைத் தொட்டார். ஆகா! அந்த இன்பத்தை எப்படி வர்ணிப்பேன்? என் உடல் இனித்தது; உயிரும் இனித்தது! இந்த இன்பத்தை மறந்து இத்தனை நாளும் இருந்துவிட்டேனே-அந்தநாளெல்லாம் வீண்தானே—என்று எண்ணத் தொடங்கிவிட்டேன், நான்!

* * *

ஜூலை 17

ஊமையாக இருக்கும் பெண்களது உள்ளம்தான் அலைகடல் போல் ஆரவாரம் எழுப்பியபடி இருக்குமோ, என்னவோ! என் இதயக் கடலிலே என் அன்பர் எழுப்பிய இன்னிசை கானம் கேட்டபடியே இருந்தது!

இப்போது தினம் தினம் கனவுகள்தான். உண்ணும் போதும், உறங்கும்போதும், கல்லூரியிலே பேராசிரியரது சொற்பொழிவுகளை கேட்கும்போதும் அவரது நினைப்புதான்! நீலவிதானத்து, நித்திலப் பூப் பந்தலின்கீழ், நானும் அவரும் மாலை மாற்றிக்கொள்ளும் அந்தப் பொன்னுளை நினைத்து நினைத்து உள்ளம் உருகியபடி இருந்தேன்.

ஜூலை 18

நேற்று கனவு கண்டேன் என்று எழுதி வைத்திருக்கிறேனே — அந்தக் கனவிலே யார் வந்தது தெரியுமா? யார் வருவார்கள்? பிரம்மச்சாரியின் கனவிலே அழகான பெண்களும், பிச்சைக்காரன் கனவிலே அறுசுவை உண்டிகளும் வந்து மறைவதுதானே உலக இயற்கை? அவருடைய சம்மதம் பெருமலேயே நான் அவரை என் வாழ்க்கைத் துணைவனுகத் தேர்ந்தெடுத்துவிட்டேன். அவர் என்னை மறுக்கப் போகிருரா, என்ன?

ஜூலை 19

அந்தக் கண்ணுடி அறையிலேயே எங்கள் காதல் பேச்சுகள் எதிரொலித்துக் கொண்டிருக்க வேண்டுமா? கூடாது; கூடாது. இன்று நான் அவரை ஆற்று மணலுக்கு அழைத்தேன். அவரோ வர மறுத்துவிட்டார். பாவம், அவர் தான் என்ன செய்வார்? நாளெல்லாம் விஞ்ஞான ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கும் அவர், அந்த அறையில் இருந்தே பழக்கப்படுத்திக் கொண்டார். இருக்கட்டும்;இருக்கட்டும்! கல்யாணத்திற்குப் பிறகுதான் நான் அவரை மாற்ற வேண்டும்.

—இவைதான் சென்ற வாரத்திலே என்னை ஆட்டிப் படைத்த எண்ண அலைகள்.

இன்று எப்படியும் என் காதலரை காவிரிக் கரைக்கு அழைத்து வந்துவிடவேண்டும்-செவிக்கினிய கானம் கிளப்பி, சிந்தை மகிழ ஆடிப்பாடி மகிழ்விக்கவேண்டும்-என்கிற எண்ணத்தோடு கண்ணுடி அறையினுள்ளே நுழைந்தேன்.

"நண்பரே! இன்ருவது எனது கோரிக்கைக்கு இணங்கமாட்டீர்களா? எப்படியும் நீங்கள் மாமரத்தடிக்கு வந்துதான் ஆகவேண்டும். அதோ துள்ளித் திரியும் மீன் குஞ்சுகளைப்போல காவிரி ஆற்றிலே நீச்சல் பழகுவோம்..."-இப்படிச் சொல்லிக்கொண்டே நான் அவரது கையைப்பிடித்து இழுத்தேன்.

அவர் திகைத்தார். நான் இத்தனை நாளும் என் உணர்ச்சிக்குப் போட்டிருந்த அணைகளை அன்று உடைத்தெறிந்தேன்.

"என்று நான் உங்களை முதன் முறையாகச் சந்தித்தேனே, அன்றே உங்களை மாலையிடுவதென்று முடிவு செய்துவிட்டேன். அத்தான்... வாயைத் திறந்து ஒரு வார்த்தை சொல்லுங்கள்... 'தாரா' உன்னை ஏற்றுக்கொள்கிறேன்'—என்று. அந்த நல்ல வார்த்தைகளை என் அகங்குளிரச் சொல்லுங்கள்.. ஏழையினுள்ளம் ஏமாற்றமே அறியாதது... அத்தான்... இந்தப் பேதையைக் கைவிட்டு விடுவீர்களா?"—நான் பேசவில்லை. என் உள்ளம் ஆணையிட்டதை, என் நாக்கு பேசியது. ஆவேசம் வந்தவளைப் போலத்தான் நான் உதடு

● தொடர்ச்சி 10-ம் பக்கம்



# விண்மீன்

## வர்ணனை

முழு நிலவாம் வைரக்கட்டி, முகில் குன்றில் மோதுண்டு சிதறிவிட்ட ஒளித்துண்டோ தாரகையே நீதான்! பாய்ந்தெழுந்த மின்னலின் படைப்போ! சாய்ந்துவிட்ட மணிமுடியின் மாணிக்கச் சிதறலோ! வேய்ந்துவிட்டான் வானக் கூறையெல்லாம் இயற்கைக் கொத்தன் இரத்தினத்தின் முத்துக்களால்! மணவாளன் வரவு பார்க்கும் நிலவு மங்கை, வான மஞ்சத்தில் பரப்பிவிட்ட மலர்க் குழுவோ நீங்கள் எல்லாம்!

## போட்டி

கான மயிலாட கண்டிருந்த வான்கோழி, தானுமதுவாகப் பாவித்துத் தானுந் தன் பொல்லாச் சிறகை விரித்தாடுங் காட்சி கண்டேன்—அதுபோல்—பொன் கடையில் புது நீலப்பட்டினிலே பரப்பியுள்ள வைரமென—விண்ணிடையே கண்சிமிட்டும் உமைக்கண்டு, மின்மினியாம் ஒரு பூச்சி மரக்கிளையில் மாநாடு கூட்டும்.

பூச்சி இனம்-பறவை இனம் மட்டும் இந்தப் புதுப் போட்டி நடத்தவில்லை. சீச்சி! மனிதர்களும் சில பேர்கள், அய்யகோ! அப்படித்தான் ஆகிவிட்டார்!

"மந்தி கையில் மலர்மாலை" என்னும் கருத்து நிறை அடுக்குச் சொல் கற்கண்டு. அறிஞர் தரும் பூச்செண்டு. அது கண்டு, எமக்குந்தான் தெரியாதோ-தமிழை அடுக்க எனச் சொல்லி, சில பேர்கள், 'அ' வினிலே ஆயிரத்தை அடுக்கி வைத்து, 'க'வினையே நாகடுக்கத் தேடி, என்ன சொன்னேம் என்பதையே மறந்து-மன்மினியாய்ப் பறக்கின்ருர் விண் மீன்கள் முன்னே!

ஓவியமும், காவியமும், உரைநடையும், இசையுங் கூத்தும். இன்னும் பல தாரகைகள், உம்போலத் தமிழினிலே இருக்கையிலே, அவைகட்குப் போட்டியாக அவனியிலே மின்மினிகள் பறப்பதுவும் இயற்கைதானே! எழில் மனையில் விழுகின்ற தீராத இழவுதானு!

## பறை சாற்று

'வான்' என்ற அடை மொழியால்-கோழி-வண்ணக் கலாப மயில் ஆவதில்லை. 'மின்மினி'ப் பெயரால் பூச்சிகளும் விண்ணின் ஒளிப்பூக்கள் ஆவதில்லை! மனிதர்களும் இதைக் கற்க வேண்டுமென்றே பறைசாற்று மஞ்சள் ஒளி முத்தே! மாணிக்க மலர்க்கொத்தே!

## வால் நட்சத்திரம்

மணி விளக்கின் சுடரே! முடிவாக ஒன்று சொல்வேன்—திகழும் உன் ஒளிப்புகழை திக்கெட்டும் பாடுகிறேம். ஆனல்-திடுமென ஓர் நாள் உங்களில் ஒருவர்க்கு ஓர் முழ வால்தான் முளைத்திடுமாம்-அய்யோ! பின்னர்-'நட்சத்திரம்' எனப் புகழ்ந்த இப்பெரு வையம், 'வால் நட்சத்திரம்' என இகழும். மனிதரிலும்—புகழ் வளர்ந்த பெரியோர்க்கு இந்தப் பொல்லாத வியாதி உண்டு.

## முடிவு

முகில் மாடத்து அகல் விளக்கே! முழு மதியாம் தருநிழலில் இறைந்து கிடக்கும் மகிழ மலர்காள்! வான் சொரியும் தங்க ஒளி மழையே! பொன் பூவே! விண்மீனே!

நீ பூமி காணும் ஓவியம்.
புதுக் கற்பனை தரும் காவியம்.

கருணாநிதி

Filmed as bound

# உங்கள் பார்வை



முரசொலியின் ஒவ்வொரு பக்கத்தைப் பற்றியும், அது தாங்கிவரும் ஒவ்வொரு எழுத்தைப் பற்றியும் உங்கள் கருத்தை எழுதுங்கள். அது இந்தப் பகுதியிலே தவறாமல் இடம்பெறும். வெறும் பாராட்டுக் கடிதங்களை மட்டுமல்ல; துலாக்கோல் நிலையிலே நின்று நீங்கள் எழுதும் ஒவ்வொரு வார்த்தைகளையும் பிரசுரிக்க விரும்புகிறோம். வாசகர்கள் நல்ல விமர்சகர்களாய்த் திகழும் இந்த நாளிலே, இந்தப்பகுதி சிறப்பாக அமையுமென்றே எதிர்பார்க்கிறோம்!

அண்ணாவின் யெண்ண மதை
பண்ணாக ஒலித்திடும்
தண்டமிழ் தீங்கனியே,
கண்ணே! முரசொலி!!
—நீ வாழ்க!!!
பண்புள்ள அரசியலும்
பயனுள்ள சீர்திருத்தமும்
பகுத்தறிந்து போதிக்கும்
நிபான்னேடே, முரசொலி!
—நீ வாழ்க!! வாழ்கவே!!!

— கோ. இறைமணி, சேலம்.

முரசொலி அழகிரி மலர் ஓர் அறிவுப் படையல். கொள்கைக்காக வாழ்ந்து கொள்கையோடு உயிர் நீத்த சுயமரியாதைச் சிங்கம் அழகிரிசாமி அவர்களின் அறிவுப் பிரச்சாரம் எந்த அளவுக்கு இன்று திராவிடத்தில் தழைத்திருக்கிறது என்பதற்கு இன்றைய நம் தி. மு. க. வே ஒரு சான்று. அதன் முன்னணி வீரராம் தங்களின் முரசொலி அவரைப் பற்றிய மலர் வெளியிட்டு திராவிடத்தாருக்கு அவரின் வீரஉணர்ச்சியை முன்னிறுத்தி முன்னேற்றப் பாதையில் செல்ல ஊக்குவித்த தங்களுக்கு என் நன்றி.

— மதிவாணன், சென்னை-1.

கடந்த ஓராண்டு காலமாக அண்ணாவின் மணி போன்ற நடையை பின்பற்றி எழுதிவந்தது இணையில்லா இன்பத்தை உண்டாக்கியது. 'பொன்முடியின் கடிதம்' என்ற பாகம் இப்போது புது வேகத்துடன் இருக்கிறது. எங்களை மிக மிக கவர்ந்தது. அத்துடன் அரசியல் தெளிவையும் உண்டாக்கிற்று. "அழகிரி நினைவு இதழ்" இயக்கத்தில் ஈடுபட்டு உழைப்பவர்களுக்கு ஊக்கம் அளிக்கக் கூடியதாக யிருந்தது. கடந்த ஆண்டு முரசொலியை காட்டிலும் இவ்வாண்டு முரசொலி நல்ல ஆக்கமும் ஊக்கமும் கழகத் தோழர்களுக்கும் மற்றவர்களுக்கும் கொடுக்கக் கூடியதாக இருக்குமென்று கருதுகிறோம்.

-- வி. எஸ். சுந்தரம், கி. ராமு, இடர்நீக்கி.

'முரசொலி' குழந்தையின் முதலாண்டில், அதன் அங்க அசைவுகளையும்; புன்னகை, பூரிப்பையும்—இயக்கத்தின் அணியாய்—இலக்கியத்தின் மலர்ச்சியாய் கண்டுமகிழ்ந்தது வாசகர் கூட்டம். இரண்டாம் பிராயத்தில் குழலையும் யாழையும் வெல்லும் மழலை மொழியை — மேலும் பலப்பல புது அம்சங்களை எதிர்பார்க்கிறோம்.

— சித்திலக்குமரி, சென்னை-23

புலியும்......

★ 5-ம் பக்கத் தொடர்ச்சி

வேண்டியவன் இப்படி போர்ப் பரணி பாடியபடி சேனைவீரர்களை ஊக்குவித்துக் கொண்டிருந்தான்.

உழைப்பையே உறுதுணையாகக் கொண்ட நெப்போலியனுக்குத் தூங்குவதற்குக்கூட நேரம் கிடைக்காது; குதிரை மீது அமர்ந்தபடியே, லகானை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு, தூக்கமென்னும் பெயரிலே சில விநாடிகளைக் கழிப்பானும். காலத்தைப்பிடிப்பதற்கு கடுஞ்சமரிட்ட நெப்போலியன் எப்படியோ தனது ஆசைக் கனவாம் ஜோசப்பைனுக்குக் கடிதம் எழுதுவதற்கு மட்டும் 'காலத்'தைத் தேடிப் பிடித்துவிடுவான்.

குதிரையின் மீது உட்கார்ந்தபடியே தூங்குவானும்-இருந்தாலும் குயில்மொழியாளுக்கு மட்டும், தவறாமல் கடிதம் எழுதிவிடுவானும்! இந்தச் செய்தி, படிப்போருக்கு வேடிக்கையாகத்தான் இருக்கிறது!

உள்ளத்திலே புது வேகத்தைக் கிளப்புவதற்கு பன்னீரும், பழரசமும் இல்லாமல்—ஸ்பரிசம் பட்ட உடனேயே புதுஉலகப் பயணம் துவக்கும் பரிமள மலர்களைப் பாராமல்—துப்பாக்கி சத்தத்துக்கிடையே-பீரங்கிவேட்டுகளுக்கு நடுவில்-இறகு பேனா பிடித்து இன்மொழியாளுக்கு அவன் எழுதிய கடிதங்கள்—கடிதங்கள் அல்ல, அவைகள்—காதற் கல்வெட்டுகள்!

அந்தக் கடிதத்திலே துடிக்கும் இளநெஞ்சத்தின் 'ஆத்மா' பேசிற்று! அந்த எழுத்துக்களிலே ஏந்திழையைப் பெற்ற இன்பமும், அதை எப்போதும் பெற முடியாத ஏக்கமும் மாறி மாறி ஒலித்தன! வாலிபர்களுக்கு வெறியூட்டி, வயதேறியவர்களுக்கு வேடிக்கை காட்டும் உணர்ச்சி இலக்கியம், அந்தக் கடிதங்கள்! இதோ ஒரு மாதிரிக் கடிதம்:

எனதன்பு ஜோசப்பைனுக்கு!

என் சிந்தை கவர்ந்த காதலினால் நீ என்னை ஈர்த்து விட்டாய்—என்னால் உண்ண முடியவில்லை. உறங்க முடியவில்லை. நான் நண்பர்களைப் பொருட்படுத்தவில்லை. புகழ் எனக்கு வேண்டாம். நான் வெற்றியை மதிக்கிறேன் — காரணம்; அந்த வெற்றி உன்னை மகிழ்விப்பதால் தான்!

என்னுடைய வெற்றி நான் எண்ணுகிறபடி உனக்கு மகிழ்ச்சியளிக்காவிட்டால் நான் எப்போதோ என்னுடைய பட்டாளத்தை உதறியெறிந்துவிட்டு பாரிசுக்கு வந்து, உன்னுடைய காலடியிலே வீழ்ந்துகிடப்பேன்!

ஜோசப்பைன்! அளவில்லாத காதலால் நீ என்னைக் கவர்ந்துவிட்டாய். போதையேற்றும் உணர்ச்சியை எனதுள்ளத்தில் றைத்துவிட்டாய். அன்பே! உன்னுடைய உருவப் படத்தைப் பார்க்காமல் ஒவ்வொரு விநாடியும் அசைய மறுக்கிறது. அந்தப் படத்தை என் அன்பு முத்தங்களால் எச்சலபடுத்தாமல் ஒவ்வொரு விநாடியும் நகருவதேயில்லை..."

—இப்படியாக, படிப்போர் நெஞ்சத்தில் உணர்ச்சி மழை பெய்விக்கும் கார்மேகக் கூட்டம், அவனது கடிதங்கள்!

அவன் தாயகத்திற்காக துப்பாக்கி ஏந்தவில்லையாம்—தன் காதலி இரும்பூதெய்துவாள் என்பதற்காகத்தான் அவன் போர் செய்கிறானும்!—போர்க்களத்திலே அவளது உருவப் படத்தைப் பார்த்தபடியே பொழுது போக்குகிறானும்! அந்தப் படத்திற்கு முத்தங்கள் தந்தபடியே நேரம் நகர்கிறதாம்—காதல் உணர்ச்சி அந்த சிங்கநெஞ்சனை எவ்வளவு பைத்தியக்காரனுக்கி யிருக்கிறது!



லண்டன் மாநகரத்து பிரமுகர் ஒருவர் அந்தக் கடிதங்களிலே ஜூலியட்டுக்காக ரோமியோ சிந்திய கண்ணீர் வெள்ளம் படிந்திருப்பதாக நினைத்தார். அராபிய நாட்டு பாலைவனத்திலே லைலாவும், கயசும் சேர்ந்துபாடிய காதல் இன்னிசை நெப்போலியனது அந்த எழுத்துக்களிலே ஒளிந்து கொண்டிருப்பதாகக் கனவு கண்டார்! 1933-ம் ஆண்டு லண்டனிலே நடைபெற்ற பொது ஏலத்தின்போது 20,000 டாலர்களை விலையாகத் தந்து அந்தத் தனவந்தர் புலிக்குட்டி புள்ளிமானுக்கு எழுதிய எட்டு காதற் கடிதங்களையும் தனக்கு உரிமையாக்கிக் கொண்டார்!

இருபதினாயிரம் டாலர்களென்ன? விலை மதிப்பில்லாத மாணிக்கங்களாயிற்றே, அவைகள்—என்று மூக்கிலே விரல் வைப்போரும் இன்று பலர் இருக்கின்றனர்.

நெப்போலியனே அல்லாது, அந்தக் கடிதங்களை வேறு எந்த வாலிபனாவது, வனிதையொருத்திக்குஎழுதியிருந்தால், முகம் வலியெடுக்கும் அளவிற்கு முத்தங்களைப் பரிசாகப் பெற்றிருப்பான்.

ஆனால் நெப்போலியன் பெற்றது என்ன? முத்தங்களல்ல; முடிவில்லா சோகம்! வளரும் வேதனை!-இவைதான்!

படைமுனையிலிருந்து—பீரங்கியின் அடிப்புரத்திலிருந்து—குதிரை ஜேனத்தின் மேல் வைத்து — வெடிகுண்டுகள் கக்கும் புகைத் திரளை நகர்த்தியபடி தினந்தினம் அவன் எழுதிக் குவிக்கும் கடிதங்கள் ஜோசப்பைனால் கவனிக்கப்படவேயில்லை. எப்போதாவது மாதமொருமுறைதான் அவள் கடிதமெழுதுவாள்—நெப்போலியனே கனத்துப் போன உள்ளத்தோடு கடிதத்தை எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏமாற்றத்தைத் தழுவியபடி கிடப்பான்! எரிமலை கக்கும் தீப்புகையைப்போல வேகமும் சோகமும் நிறைந்த பெருமூச்சுகளால் பாசறையை நிரப்புவான்.

அவன் போர்வீரர்களுக்கு உத்தரவு தந்தபடியே உலவுவான்; ஆனாலும் அவன் உள்ளத்தின் ஒரு புறத்தில் உதிரம் கசிந்து கொண்டே இருந்தது!

அந்த வேதனையைக் குறைத்துக்கொள்வதற்காகவே, அவன் இன்னும் வேகமாக கடிதங்களை-பாசம் கக்கும் எழுத்துக்களை-பேசும் பொற்சித்திரங்களை, ஜோசப்பைனுக்கு அனுப்பியபடியே இருந்தான்!

ஜோசப்பைனுடைய மௌனத்திற்கு பலர் பல காரணங்களைக் காட்டுகிறார்கள். ஒரு சிலர் சொல்கிறார்கள்—நெப்போலியனது கடிதங்களைக் கொடுப்பதற்காக அவனது தூதுவன், அவளது அறைக்கதவுகளைத் தட்டும் போதெல்லாம், அங்கே ஒரு வாலிபன்—வனப்புமிக்கோன் அந்த புள்ளிமானது அதரங்களை அதரங்களால் பற்றியிழுத்தபடியே மஞ்சத்திலிருப்பானும்!

இந்த நிலையிலும் நெப்போலியனுக்கு அவன் மீதிருந்த காதலன்பு குறையவேயில்லை. அவன் சாகும்போது—அந்த வீரனது ஆவி இந்த வையகத்தைப் பிரியும் போது—அவன் உச்சரித்த கடைசி வார்த்தைகள் இவைதான்—

"பிரான்ஸ்!, பிரான்ஸ்!!"
"ஜோசப்பைன்!
ஜோசப்பைன்!!"

★



சிங்கத் தம்பிகளே! தங்கத் தங்கைகளே!

"வருவேன்; வரப்போகிறேன்; வந்தேவிட்டேன்!" என்று பயமுறுத்திக் கொண்டிருந்த பரிட்சை, வந்த வழியே போய்விட்டது! கல்வியில் சூரர்களான நீங்கள் அடுத்த ஆண்டு கண்டிப்பாக மேல் வகுப்புக்குப் போகவேண்டும்; இதுதான் எங்கள் ஆசை!

"அண்ணா! இந்த ஆண்டு நான் நன்றாகத் தேர்வு எழுதியிருக்கிறேன். சென்ற ஆண்டு 'வெற்றி நிச்சயம்' என்று சொன்னான் ஒரு மரத்தடி சோதிடன்; அதையே அசைக்க முடியாத முடிவு என்று நம்பினேன்; சரியாகப் படிக்கவில்லை; கடைசியில் தோற்றே போனேன்; இப்போது விழித்துக்கொண்டேன்" என்று 'ஒரு சோதிடன்'மேல் கோபத்துடன் கடிதம் எழுதியிருக்கிறான் அருள் என்ற தேனீத் தம்பி. உழைக்காமல் பிழைப்பவர்களைக் கண்டால் கோபம் வருவதில் ஆச்சரியமில்லை! அப்படி கோபம் கொண்ட ஒரு சுட்டித் தம்பியின் கதை இவ்வாரம் வருகிறது. படியுங்கள்:

"கொஞ்ச நாட்களாக முத்துவும் செல்வியையும் காணோமே, எங்கே அவர்கள்? அவர்களது குறும்புத்தனங்களை இனி நாங்கள் படிக்கவே முடியாதா?" என்று சில தம்பிகள் கேட்டிருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் கல்கண்டுப் பதில், இதோ; குறும்புத்தனங்களைப் படிப்பதோடு மட்டுமல்ல; பார்க்கவும் செய்யலாம். ஆமாம்; அடுத்த வாரம்முதல் முத்துவும் செல்வியும் சித்திரத்திலே வரப் போகிறார்கள்; உங்களைச் சிரிக்க வைக்கப்போகிறார்கள்!

— சொர்ணம்

# பிறை வானம்

பிள்ளைகள் பகுதி



## மந்திரவாதி

[ திருவாரூர் செல்வம் ]

"அப்பா இல்லை; அம்மா இல்லை; யாருமே துணையில்லை" என்று ஒருவன் சொல்லிக்கொண்டால், அவனை நாம் 'அனாதை' என்றுதானே சொல்வோம்! அதைப் போல பாலனுக்கும் அப்பா இல்லை; அம்மா இல்லை; ஆனால் 'அனாதை' என்று சொன்னால் பொல்லாத கோபம் வந்துவிடும் அவனுக்கு! ஏன் தெரியுமா? அவனுக்கு அப்பா இருக்கிறாராம். அவர் இருக்கிறார் என்பதைவிட இல்லாதிருப்பதே மேலாம்—இப்படிச் சொல்லுவான் அவன். அப்பாவின்மேல் அவனுக்கு என்ன தான் கோபமோ! அவர் எங்குதான் இருக்கிறாரோ!



ஆனால், இப்போது பாலனுக்கு யார் துணை தெரியுமா? கிராமத்துக் கோடியிலே வசித்த ஒரு ஏழைக் கிழவிதான்! உறவினர் யாருமில்லாத அந்தப் பல்லுப் போன பாட்டிக்கு, எங்கிருந்தோ வந்த பாலன் தான் ஒரே துணை! அவன்தான் அவளுக்கு எல்லாமே!

★

அன்று அந்தப் பள்ளியில் ஒரே ஆனந்தம்; ஆரவாரம்; அமர்க்களம். ஏன் தெரியுமா? அன்று பள்ளிக்கு ஒரு மந்திரவாதி வருகிறார். மாயங்கள் பலவற்றைச் செய்யப் போகிறார். இதுதான் காரணம்.

கடைசியில் மந்திரவாதிவந்தார். என்னென்னவோ பேசினார். 'அப்படி; இப்படி' என்று கத்தினார். மந்திரங்கள் செய்ய ஆரம்பித்தார்.

அதில் ஒன்றுதான் இது: மந்திரவாதி தன்னுடன் வந்த ஒரு பையனை கீழே படுக்கவைத்தார். ஒரு கூடையால் மூடினார். ஒரு நீண்ட கத்தியை எடுத்துக்கொண்டார். 'என்ன செய்யப் போகிறாரோ; ஏது செய்யப் போகிறாரோ' என்ற ஆசை உந்தித்தள்ள, பையன்கள் கவனித்துக் கொண்டிருந்தனர். சற்று நேரத்திற்கெல்லாம் அந்த ஆசை பெரும் வியப்பாக மாறியது. எல்லோருடைய வாயிலிருந்தும் 'ஆ...த்சு...த்சு...' என்ற சத்தங்கள் கிளம்பின! ஏன் தெரியுமா? அந்த மந்திரவாதி தன் கையிலிருந்த கத்தியால், கூடைக்குள் பலமுறைக் குத்தினார்! 'உள்ளே இருக்கும் பையனின் கதி என்னவது?'— இதை எண்ணித் தான்பையன்கள் நடுங்கினர். ஆனால் பயந்தது போல் எதுவும் நடக்கவில்லை.

மந்திரவாதி கூடையைத் தூக்கினார். பையன் சிரித்தபடியே வெளியே வந்தான். "எப்படி? எப்படி?" என்ற கூக்குரல் எங்கும் எழும்பின!

உடனே மந்திரவாதி, "பையன்களே! எப்படி என்று கேட்கிறீர்கள்? சொல்லுகிறேன்; நான் பையனை கூடைக்குள் மறைத்ததும், ஒரு மந்திரம் போடுவேன். உடனே பையனின் உடலும் உயிரும், காற்றோடு கலந்து விடும்; கூடையைவிட்டு வெளியேபறந்து விடும். அப்புறம் காலிக்கூண்டு தானே! அதில் கத்தியால் குத்தினால் என்ன? குண்டு வைத்து வெடித்தால்தான் என்ன? மீண்டும் மந்திரம் உச்சரிப்பேன். காற்றோடு கலந்தஅவன் நம்மோடு கலந்து விடுவான் — இததான். இதைக் கற்க நான் பதினேழு வருஷம், பத்து மாதம், ஏழுநாட்கள் தலைகீழே தவம் செய்திருக்கிறேன்!" என்றான். பையன்கள் வாயைப் பிளந்தபடி உட்கார்ந்திருந்தார்கள்.

அதே சமயம், "கொஞ்சம் இருங்கள்" என்று சொல்லிக் கொண்டே மேடைக்கு வந்தான் பாலன். "நானும் குத்திப் பார்க்கிறேன்; நாங்கள் பணம் கொடுத்திருக்கிறோமே, உங்கள் மந்திரம் பொய்யா, மெய்யா என்று தெரிய வேண்டாமா?" என்றான்.

மந்திரவாதி 'சரி' என்றான்.

பையன் கூடைக்குள் மறைந்தான். பாலன் கத்தியைக் கையில் எடுத்தான். ஒரு மூலையில் குத்தினான். ஏமாற்றம்! மறுமூலையில் குத்தப் போனான். மந்திரவாதி புரியாத பாஷையில் ஏதோ சொன்னான். அந்த பாஷையைப் புரிந்து கொண்ட பாலன், கையைக் கொண்டு சென்ற மூலையில் குத்தாமல், 'சடக்' கென்று வேறு மூலையில் மாறிக் குத்தப் போனான். மந்திரவாதி தடுக்க முயன்றான். அதற்குள் பாலன் குத்தியேவிட்டான்.

மறுகணம் 'ஐயோ' என்று அலறிக் கொண்டு, கூடையைத் தூக்கி எறிந்து வெளியே பாய்ந்தான் அந்தச் சிறுவன். கையில் சிறிது காயம் பட்டிருந்தது. இரத்தம் கசிந்துகொண்டிருந்தது.

மந்திரவாதி தலைகுனிந்தார். அவர் முகத்தில் ஈ ஆடவில்லை. பையன்களையும், ஆசிரியர்களையும் பார்த்தார். "ஐயா, என்னை மன்னித்து விடுங்கள். நான் செய்வது ஒன்றும் மந்திரம் இல்லை; அப்படி ஒன்று இருப்பதாகவும் எனக்குத் தெரியவில்லை; எல்லாம் தந்திரம்தான்; ஏய்ப்பதுதான்! நான் கூடையில் குத்தும்போது 'எங்கு குத்துகிறேன்' என்பதை, அதற்காக கற்றுவைத்திருக்கும் பாஷையில் சொல்லிவிடுவேன். பையன் குத்தும் திசைக்கு எதிர்புறம் ஒதுங்கி விடுவான். இப்படி மாறி மாறிக் குத்தும்போது, அவனும் மாறி மாறி பதுங்குவான்... இதுதான் தந்திரம். இதை எப்படியோ புரிந்து கொண்டுவிட்டான் இந்தச் சுட்டிச் சிறுவன்!" என்று சொன்னார். பாலனின் பக்கம் திரும்பினார். "என் தந்திரத்தைஅறிந்த நீ யார்?" என்று கேட்டார்.

"நானும் உன்னைப்போல் ஏய்த்துப் பிழைக்கும் ஒரு தந்திரவாதியின் மகன் தானய்யா! இந்த உழைக்காமல் பிழைக்கும் பண்பு எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவரிடமிருந்து ஓடிவந்துவிட்டேன்" என்றான்.

உடனே யாரும் எதிர்பாராத ஒரு சம்பவம் அங்கே நடந்துவிட்டது. மந்திரவாதி பாலனை கூர்ந்து கவனித்தார். மறுகணம் "ஆ, பாலனா நீ!" என்று அலறினார். பாலனை இறுகத் தழுவிக்கொண்டார். பாலன் விழித்தான்.

"புரியவில்லையா, பாலா? நான் தாண்டா உன் தந்தை! நன்றாகப் பார்! உன்னைத் தேடித்தேடி அலைந்தேன். இப்போது தானாகவே கிடைத்துவிட்டாய்" என்றார். பாலன் தன் அப்பாவை அப்போதுதான் புரிந்துகொண்டான்.

★

இப்போது உழைக்காமல் பிழைப்பதில்லை பாலனின் அப்பா! அந்த மாஜி மந்திரவாதி இப்போது அந்தப் பள்ளிக்கூடத்து தோட்டக்காரன்! தந்தையைத் திருத்திய பாலனுக்கு, மற்ற மாணவர்களுக்கு மத்தியில் 'நல்ல தம்பி' என்ற பெயராம்!

## வெற்றியைத் தேடிய விளையாட்டுத் தம்பி!

அந்தச் சிறுவனுக்கு வயது பதினான்குதான். அப்பா சாதாரண செருப்பு தைக்கும் தொழிலாளி; அவரோ இறந்துபோனார்! அம்மாவோ ஒரு சலவைத் தொழிலாளி: அவள்தான் அவனுக்கு ஒரே துணை!

தன் செல்லப் பிள்ளையை தருமப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பினாள் தாய். ஆனால் அவனோ—அந்த வானம்பாடியோ பள்ளியை விட்டுப் பறந்து வந்தது. அது மட்டுமல்ல; அவன் எப்போதும் பாடிக் கொண்டேயிருப்பான்; பாட்டைக் கேட்டு பரவசமடைவார்கள் பலர்; அவர்களைக் கண்டு சிரிப்பான்! எழுதுவான்; சின்னச் சின்னக் கதைகள் எழுதுவான்; படிப்பவர் யாரும் கிடைக்க மாட்டார்கள்; அதைக் கண்டு அழுவான்!

'இப்படி ஒரு பிள்ளையா?' என்று அம்மா ஏங்கினாள்.

இப்படி யிருக்கையில், ஒரு நாள் அந்தப் பையன் தன் அம்மாவின் எதிரில் வந்து நின்றான். அவன் தோளில் ஒரு பை தொங்கிக் கொண்டிருந்தது. அம்மா அவனைப் பார்த்தாள். "எங்கேயடா புறப்பட்டாய்?" என்று கேட்டாள்.

"எங்கேயோ, எனக்கே தெரியாது! வெற்றியைத் தேடிப் போகிறேன்"...என்றான் அவன்.

அம்மாவுக்கு அழுகையே வந்து விட்டது. "மகனே! எங்கேடாப் போகப் போகிறாய்? உன் தந்தையைப் போல நீ செருப்பு தைக்கத்தான் பிறந்திருக்கிறாய்! முறைப்படி அதையே செய்; பிழைக்க வழியைப் பார்!" என்றாள்.

ஆனால் அவனோ சிரித்தான். "அம்மா! உனக்கு ஒன்றுமே தெரியாது! நீ படிக்காதவள். பெரிய பெரிய மேதைகள் எல்லாம் சின்ன வயதில் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறார்கள் தெரியுமா? அது எனக்குத் தெரியும். ஒருநாள் நானும் அவர்களைப் போல் ஆவேன். நீ கவலைப் படாதே!" என்று சொன்னான். நடக்கத் தொடங்கினான். அம்மா 'வேண்டாம்; வேண்டாம்' என்று தடுத்தாள். ஆனால் அவனோ "டா...டா" என்று கையைக் காட்டிவிட்டு, நாட்டின் தலைநகரை நோக்கி நடந்தான்.

அந்தச் சின்ன வயதில் பசி, பட்டினி, பஞ்சம் இவைகளை எதிர்நோக்கி, தன்னந்தனியனாய் 'எங்கே வெற்றி?' என்று தேடி அலைந்த அவன் யார் தெரியுமா? அவன்தான் பின்னால் சிறுவர்களுக்கென்றே எழுதியவன்—பாடியவன்-'அகில உலக குழந்தை எழுத்தாள மன்னன்'கத் திகழ்ந்தவன்—ஹான்ஸ் கிரிஸ்டியன் ஆண்டர்சன் என்பான்!

# திரும்பிப்பார்!

நீங்கள் இந்தப் பகுதியிலே வரலாற்றின் சுவைமிக்க ஏடுகளை-புகழ் பெற்றோரின் வாழ்க்கைக் குறிப்புகளை 'திரும்பிப்பார்'ப்பீர்கள்! வாரா வாரம் இந்தப் பகுதி புதுப்புது செய்திகளைத் தாங்கி வரும்.

அமெரிக்கக் குடியரசின் தந்தை — 'பிரதிநித்வம் இல்லையேல் வரி விதிக்கும் உரிமை இல்லை' என்னும் கோஷத்தை விடுதலை விருத்தமாக்கி, ஆங்கில ஏகாதிபத்தியத்தின் விலா எலும்புகளை உடைத்த வீரன் ஜார்ஜ் வாஷிங்டனுடைய வரலாறு உங்களுக்குத் தெரியுமா?

1774-ம் ஆண்டு அவர், 'வட அமெரிக்காவிலுள்ள எந்த அறிவுடையவனும் சுதந்தரத்தை விரும்பவில்லை' — என்று விண்ணதிர முழக்கமிட்டாராம். காலம் மாறியது. வாஷிங்டனும் மாறிவிட்டார். இந்த நிகழ்ச்சி நடந்து இரண்டாண்டுகள்கூட முடியவில்லை. வாஷிங்டன் சுதந்தரப் போரின் நிகரில்லா தளகர்த்தனாகிவிட்டார். அமெரிக்கக் குடியரசின் முதல் ஜனாதிபதி—என்னும் பெருமையையும் பெற்றார்.

விடுதலை இயக்கத்தின்மீது ஆரம்பத்தில் மண்ணை வாரிப் போடுபவர்கள் இறுதியில் இப்படித்தான் இலட்சிய முரசு கொட்டுவதற்கு ஒன்றுசேர்ந்து விடுகிறார்கள்!

★

காந்தியார் இன்று மகாத்மாவாகிவிட்டார். மாபெரும் அரசியல் தலைவர் என்கிறார்கள், பலர்! ஆனால் இவரைப்பற்றி வீரா ஆன்ஸ்டே என்னும் ஆங்கிலப் பேராசிரியை என்ன எழுதி வைத்திருக்கிறார் தெரியுமா?

"பொதுமக்களுடைய பழங்காலக் கருத்துக்கு ஒத்து வரும்படியான கொள்கைகளைப் பரப்பியதால்தான் மிஸ்டர் காந்தி புகழடைந்தார். அவருடைய சிறப்பான பெயருக்கு ஆதாரம் அவர் ஒரு மதத் தலைவர் என்பதுதான். மதச்சார்பற்ற ஒரு விடுதலை வீரன் (இந்தியாவில்) அவ்வளவு செல்வாக்கு பெற முடியாது"

எங்கே, காந்தியாரை நவீன உடை அணிந்து, கைராட்டையையும், குடிசைத் தொழிலையும் பற்றிப் பேசாத உருவமாகக் கொஞ்சம் நினைத்துப்பாருங்கள்! ஜின்னாவின் உடையில், பெரியாரின் கருத்துக்களை அவர் சொல்லியிருந்தால் அவர் மகாத்மாவாகியிருக்க முடியுமா என்று யோசியுங்கள். வீரா ஆன்ஸ்டே முடிவு உங்கள் சிந்தனைக்கே விடப்படுகிறது!

★

பிரான்சு நாட்டிலே புரட்சி உருவாவதற்கு முன்பே அங்கே அடக்குமுறை தலைவிரித்தாட ஆரம்பித்து விட்டது. பேரறிஞன் வால்ட்டேர் நாடு கடத்தப்பட்டான். தாயகத்து மண்ணை மிதிப்பதற்குக்கூட அவனுக்கு உரிமையில்லை! வாழ் நாளின் பெரும் பகுதிகளை அன்னிய நாட்டில் கழித்துவிட்டு, தன் கடைசி காலத்தில் வால்ட்டேர் பிரான்சுக்கு வந்தான். தன்னுடைய கொள்கைகளுக்கு இடமில்லாவிட்டாலும், தன்னுடைய சவமாவது பிரெஞ்சு மண்ணுக்குச் சொந்தமாக வேண்டும் — என்கிற ஆசை காரணமாகத்தான் அவன் தாய்நாடு திரும்பினான். அப்போது அவனுக்கு வயது எண்பத்து நான்கு. "வடதில் சிறியவர்கள் பாக்கியம் செய்தவர்கள்; ஏனெனில் அவர்கள் பெரும் பெரும் நிகழ்ச்சிகளைக் காண்பார்கள்!" என்று சொன்னான். அவன் சொன்னது அத்தனையும் பின்னால் உண்மையாகிவிட்டது. பதினேரு வருஷங்களுக்குள்ளாகவே புரட்சி கிளம்பி விட்டது.

முனனர் திரு. வி. க. அவர்கள் இன்னும் பத்து ஆண்டுகளில் திராவிடநாடு கிடைத்துவிடும் என்று சொன்ன வாசகத்தை இப்போது கொஞ்சம் நினைவுக்கு இழுத்து வாருங்கள்.

★

## தாரையின்......

★ 7-ம் பக்கத் தொடர்ச்சி

களைத் திறந்து மூடிக்கொண்டிருந்தேன்.

"தாரா! அவசரப்பட்டுவிட்டாயே!"-கண்ணீரை உதிர்த்தபடியே அவர் இந்த வார்த்தைகளைச் சொன்னபோது நான் சிலையாகி விட்டேன்.

"சரியென்று சொல்லுங்கள், அத்தான். இல்லையேல் நான் உங்கள் காலடியிலேயே பிணமாகி விடுவேன்..." — நான் பேசிக் கொண்டே இருந்தேன்.

"தாரா! நான் உன் கோரிக்கையை ஏற்பதற்குமுன், நீ எனக்காக ஒரு உதவி செய்வாயா...? எங்கே- உன் கோவ்வை அதரங்களால் ஒரு முத்தம் கொடு..."

'இச்' என்ற சத்தம்......கைப் பிடித்து அணைத்து அவர் அதரங்களிலே என் அன்பு முத்திரையைப் பதித்தேன்.

"கண்ணே! இன்றுதான் நான் பிறவிப் பயனைப் பெற்றேன்; ஆனாலும் தாரா, நீ ஏமாந்து விட்டாய்! ஆமாம்; தாரா! நான் உனக்கு தகுதியற்றவன்—எள்ளளவும் தகுதியற்றவன்"— அவர் சப்தமிட்டார். அந்தக் கண்ணாடி அறையே அதிர்ந்தது, அந்த முழக்கத்தால்!

"போய்விடு, தாரா! இந்த இடத்தைவிட்டே ஓடிவிடு! என்னைப் பற்றிய நினைவையே உன் இருதயத்திலிருந்து அகற்றிவிடு! போ, தாரா! போ!"—இப்படிச் சொல்லிக் கொண்டே அவர் எழுந்து நின்றார்-முதன் முறையாக!

அய்யகோ; அந்தக் கோரக் காட்சியை எப்படி வர்ணிப்பேன்! அந்த அழகு மாளிகைக்கு அஸ்திவாரமே இல்லை; ஆமாம்; என் ஆசைக் காதலன் இரண்டு கால்களுமில்லாத முடவன்! என் மூச்சு நின்றுவிடும் போலிருந்தது. கண்கள் இருட்டின.

இரண்டு ஊன்று கோல்களை தோளிலே தாங்கிக் கொண்டு தொத்தித் தொத்தி அவர் உள்ளே சென்று விட்டார்!

இந்த உண்மையை மறைப்பதற்காகத்தான் அவர் இத்தனை நாட்களும் உட்கார்ந்த இடத்தை விட்டு அசையாமலிருந்தாரா? என் நெஞ்சு பதறியது.

"ஓடிவிடு, தாரா! ஓடி விடு!" அவர் போட்ட கூச்சல் என்னைத் துரத்தி அடித்தது.

என் வாழ்க்கையிலே விழுந்த இந்தப் பேரிடியை எப்படித் தாங்குவேன்? எப்படி மறப்பேன், இந்த மனக் கவலையை? விழ்ந்தது என் மனோராஜ்யம்! சரித்தது நான் கட்டிய எண்ணக்கோட்டைகள்!

ஆமாம்; இந்த சோக நிகழ்ச்சியை மறப்பதற்கு என்னிடம் ஒரே வழிதான் இருக்கிறது. தாரா இத்தனை நாட்களும் இன்பக்கனவுகள் கண்டாள். இன்று முதன்முறையாக அவள் துன்பக் கனவு கண்டிருக்கிறாள். நடந்தவைகளை கனவென்று நினைத்தால்தான் அவள் உள்ளத்திலே மூண்டிருந்த கனல் மறையும்; கனம் நீங்கும்; களங்கம் துடைக்கப்பெறும். ஃ

## பொன்முடியின்......

● 2-ம் பக்கத் தொடர்ச்சி

நீ நினைக்கலாம்—ஆச்சாரியாருக்கும், பின்பற்றும் ஒரு அணி வகுப்பு இருக்கிறதே; அவர்களனைவரும் கருத்துக் குருடர்களா?—என்றுகூட நீ கேட்கலாம். ஆமாம்; குமார்! ஆச்சாரியாரிடம் ஒரு **படை இருக்கிறது**. அவரது கடையிலும் விற்பனையாகிக் கொண்டுதான் இருக்கிறது. ஆனால் ஒன்று மட்டும் உறுதி-அவரிடம் எங்களது பகுத்தறிவுப் பாசறையை எதிர்த்து நிற்க **அரண் கிடையாது**. எங்களது விஞ்ஞானக் கருத்துக்களுக்கு தக்க பதில் கூறுவதற்கு அவருடைய அஞ்ஞானக் கொள்கைகளுக்கு போதிய வலிமை கிடையாது! படையிருந்து, அரண் இல்லாமல் அவர்மட்டுமென்ன; ஆண்டவனுல்தான் என்ன செய்துவிட முடியும்?

சரி, குமார்; எங்கோ ஆரம்பித்து எங்கோ கொணர்ந்து முடித்துவிட்டேன் — உன்னுடைய பதில் கண்டு அடுத்த கடிதம் தீட்டுகிறேன்.

அன்பு,
பொன்முடி.

ஹே ராமா! தவறாக நடந்துகொண்ட தேவியை மன்னிக்கும்படி பிரார்த்திக்கிறேன்!

## 'மன்னிப்பு காண்டம்!'

ஏப்ரல் 3-ந் தேதி 'கல்கி' இதழில், ஆச்சாரியார் அவர்கள் ராமநவமி கொண்டாடுமாறு விடுத்திருக்கும் அறிக்கையின் இறுதிப் பகுதியில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்:

"ஒவ்வொருவரும் தன்னை ஒரு ராவணனாக பாவித்துக் கொண்டு தேவியை மன்னிக்கும்படி பிரார்த்திப்பார்களாக."

'தேவியை, மன்னிக்கும்படி பிரார்த்திப்பதென்றால்' யாரிடம் பிரார்த்திப்பது? ராமனிடம்தானே பிரார்த்திக்க வேண்டும்? ஏன் தேவியை மன்னிக்கும்படி பிரார்த்திக்க வேண்டும்? தேவி அப்படி என்ன தவறு செய்துவிட்டாள்? ஆம்; அவள் தவறு செய்ததாகக் கருதித்தானே ராமன் அவளை தீயில் இறங்கச் செய்தும், காட்டிற்கு அனுப்பியும் கடுமையான தண்டனைகளுக்கு ஆளாக்கினான்! ஆதலால்தான் 'ராமநவமி' அன்று தேவியை மன்னிக்குமாறு ராவணன், ராமனிடம் சிபார்சு செய்ய வேண்டுமென்று ஆச்சாரியார் விரும்புகிறார். அந்தோ! வெட்கக்கேடு! ஒரு ராவணனல்ல; உலகத்திலுள்ள எல்லோரும் ராவணர்களாகக் கருதிக்கொண்டு தேவி செய்த தவறை மன்னிக்கும்படி அவள் கணவன் ராமனிடம் முறையிட்டால் ராமன் மனம்தான் என்ன பாடு படும்? பாவம்; ராமருக்கு நம் அனுதாபங்கள் உரியதாகுக.



# இயல் இசை கூத்து

கலையுலகின் நமது செய்திகளை 'அவாள்'ஏடுகள் இருட்டடிப்புசெய்து, திரித்துக் கூறி, வெளியிடுகின்றனவே; நீங்களாவது பன்னிரண்டு பக்கங்களில் ஒரு பக்கத்தை திரைச் செய்திகளுக்கு ஒதுக்கக்கூடாதா?'— என்று ஏராளமான நண்பர்கள் நமக்கு எழுதியிருக்கின்றனர். அவர்களது வேண்டுகோளுக்கிணங்கவே இந்தப் பகுதி துவங்குகிறது. 'இயல் இசை கூத்து' வாராவாரம் இன்பக் கதைகள் சொல்லும்; 'வெள்ளி வீதி' கலைத் தேரின் அலங்கார பவனியை அரங்கேற்றி உங்களை மகிழ்விக்கும்!

## செந்தாமரை

சிட்டாடல் ஸ்டூடியோ அன்று சுறுசுறுப்பாக இருந்தது. சிரித்த முகங்களும், உற்சாக உள்ளங்களும் அங்குமிங்குமாக நடமாடிக் கொண்டிருந்தன.

ஆனல், ஸ்டூடியோவின் ஒரு மூலையிலே மட்டும் சோகம்! தலைவிரி கோலமாக ஒருவர் நின்றுகொண்டிருந்தார். தெரிந்த முகம்தான்! ஆமாம்; நண்பர் ராஜேந்திரன்தான் அவர்! அவர் ஏன் அப்படி சோகமாக நிற்கிறார்?

இன்னொரு ஓரத்திலே ஒரு 'விக்கல்' சப்தம் கேட்டது. நான் திடுக்கிட்டேன். லலிதாதான் அழுதுகொண்டிருந்தார்— இல்லை; அழுவதற்காக ஒத்திகை பார்த்துக்கொண்டிருந்தார்.

"ஏன் சார், இவர்களெல்லாம் இப்படி இருக்கிறார்கள்? என்ன நடந்தது?"— என்று ஒவ்வொருவரையும் கேட்டேன். யாரும் பதில் சொல்லவில்லை. டைரக்டர் பீம்சிங்கைக்கூட கொஞ்சம் வினயமாகக் கேட்டேன். அவரோ என் வார்த்தைகளையே காதில் போட்டுக்கொள்ளவில்லை- காரியத்திலேயே கண்ணுயிருந்தார். நான் சும்மாயிருப்பேனு, என்ன? ஒலிபெருக்கியில்லாமலேயே கத்த ஆரம்பித்துவிட்டேன்.

"உள், சைலன்ஸ்..." ..."ரெடி ....ஸ்டார்ட், பிளீஸ்..."—இந்த முழக்கங்கள் என்னை ஊமையாக்கிவிட்டது. அதற்கப்புறம் நடந்தவை இவைதான்:

கமல மலர் போன்ற வதனம் — அவள் பெயர்கூட கமலம்தான்! கையிலே குழந்தையுடன் நின்றுகொண்டிருக்கிறாள். முகத்திலே சோபை இல்லை; சோகத்தின் சாயல்தான் படிந்திருக்கிறது.

கையிலே மழலையுரை சிந்தும் பேசும் பொற்சித்திரம்—

கண்களிலே மலைவீழ் அருவியென நீர்த்துளிகள்—

ஒரு தமிழ்நாட்டு யுவதி இப்படிக் காட்சியளிப்பதற்கு காரணம் என்னவாக இருக்கும்? கொஞ்ச நேரம் பொறுங்கள். அவர்களாகவே காரணத்தை விளக்கிச் சொல்லட்டும்.

அதோ, அவளுடைய அன்னையார், பொக்கை வாய்தனைத் திறந்து, "உன் புருஷன் எங்கே, அம்மா!"—என்று பாசம் ததும்ப, வினவுகிறாள்.

உள்ளம் ஒட்டியவனுக்கு இன்ப முத்திரைகள் பல தந்த கமலத்தின் அதரங்கள் அசைகின்றன; இந்த சோகச் செய்தியைச் சொல்கின்றன—

"அவன் புருஷனல்ல, அம்மா! என்னை புசித்துவிட்டுப் போன புலி!"

—இப்படி அவள் சொன்னதிலிருந்தே கமலம் 'கைவிடப்பட்ட கமலம்' என்பது புலனாகிறது.

அதோ, அரும்பு மீசை வாலிபன், ஆவலை முகத்திலே தேக்கியபடி அவ்வளவு அவசரமாக ஏன் வருகிறான்? வண்டு பறக்கும் காரணம் தெரியாமலா இருக்கிறது: மலர் நாடித்தான்!

அவன் நாடிவந்த மலர் கசங்கிய மலர்... பாலப் பருவத்தில் அத்தான் என்று சத்தான மொழியில் அழைத்தவள், இன்று அந்த இன்ப உருவத்தைக் கண்டதும் பாம்பை மிதித்தவள்போல பயந்து நடுங்குவானேன்?

தங்கச் சுரங்கத்து வேலையை முடித்துவிட்டு, தங்கம் நிகர் கமலத்துக்குத் தாலி கட்ட வந்தவன், அவள் தாயாகிவிட்ட செய்தி அறிந்து, துடித்துப் புலம்பும் காட்சி, அது!

கமலமாக நடிக்கும் லலிதா தன் இதயத்தில் குடியேறியவனை இழந்துவிட்ட சோகக் கதையை அந்த ஒரு சொட்டுக் கண்ணீர் மூலமாகவே சொல்கிறார்...

இருண்ட வாழ்வால் விழுங்கப்பட்ட தங்கப்பனாக நடிக்கும் ராஜேந்திரன் பித்தனாக மாறும்கட்டம்—அழகு தமிழ் வசனங்கள் சிட்டாடல் ஸ்டூடியோவையே அமுத மயமாக்கின

'கட்'...என்ற ஒலி கேட்டது. வெற்றிலை பாக்கு போடுவதற்குக் கற்றுக்கொள்ளும் பீம்சிங் இப்போதுதான் என்னைக் கவனித்து, கொஞ்சம் காவிப் பற்களைக் காட்டினார். "உங்கள் கேள்விக்குப் பதில் கிடைத்ததா?"—என்று கேட்டார். இல்லையென்று உதட்டைப் பிதுக்கினேன். "மதராஸ் பிக்சர்சாரின் 'செந்தாமரை'க்காகத்தான் இந்த ஆர்ப்பாட்டம்!" —என்றார்! இப்போதுதான் எனக்கு விபரங்கள் புரிந்தன.

நண்பர் அரங்கண்ணலின் அழகு வசனங்களால் உருவாகியிருக்கும் 'செந்தாமரை'யை நண்பர் பீம்சிங் தன்னுடைய திறமையான டைரக்ஷனல் மலரவைக்கிறார்.

மதராஸ் பிக்சர்சாரின் இந்தப் படத்தில் கே. ஆர். ராமசாமி, சிவாஜி கணேசன், ராஜேந்திரன், லலிதா, பத்மினி ஆகியோர் நடிக்கின்றார்கள்.

★

# வெள்ளி வீதி

## படையெடுப்பு

தமிழ் நாட்டுக் கலையுலகத்திலிருந்து வடநாடு நோக்கிச் செல்லும் படையெடுப்பு இப்போது என்றுமில்லாத வகையில் பலமடைந்திருக்கிறது.

பட்சிராஜாவின் இந்தி மலைக்கள்ளனுக்கு (ஆசாத்) நிகரில்லாத வெற்றி கிடைத்திருக்கிறதாம். 'கரண்ட்' இதழ், "ஆசாத்திற்காக புக்கிங் ஆபீசிலிருந்து மைல் கணக்கில் டிக்கெட் வாங்குவதற்கு 'கியூ' நிற்பதாக" எழுதியிருக்கிறது.

இந்த மகத்தான வெற்றியைத் தொடர்ந்து பட்சிராஜா விரைவிலே அடுத்தப் படம் ஒன்றையும் துவங்க இருக்கிறது. அநேகமாக இந்தக் கதை 'மரகதமாக' இருக்குமென்றும், இதன் இந்திப் பதிப்பில் திலீப் குமாரும், வைஜயந்திமாலாவும் நடிப்பார்களென்றும் தெரியவருகிறது.

★

வடநாட்டு நடிகர்களைக் கொண்டே வடநாட்டுக் கலையுலகத்தை ஆட்டுவிப்பதென்று ஏ. வி. எம். முடிவு செய்திருக்கிறார். அவருடைய அடுத்த சமூகப் படத்தில் 'அவரா'வின் பிரபலமான ஜோடி ராஜ்கபூரும், நர்கீசும் நடிப்பார்களாம்.

★

பெரிய படத் தயாரிப்பாளர்களெல்லாம் இந்திப் படங்கள் தயாரிப்பதிலேயொதுங்கி விட்டால், தமிழிலே படங்கள் எடுக்கும் எங்கள் பாடு கொண்டாட்டம்தான் என்கிறார் ஒரு குட்டி, 'ஒரு-பாஷைப் படமுதலாளி'!

## அமர சந்தேசம்

இந்தியிலே மகத்தான வசூலைக்கொடுத்த 'பாய்ஜூ-பவாரா' இப்போது சென்னையில் தமிழிலும், தெலுங்கிலும் தயாராகி வருகிறது. அதற்கு 'அமர சந்தேசம்' என்று பெயர் சூட்டியிருக்கிறார்கள். தமிழ்ப் படத்திற்கான வசனங்களை தோழர் திருவாரூர் தங்கராசு எழுதி வருகிறார். இதன் விநியோக உரிமைகளை நேஷனல் பிக்சர்சார் பெற்றிருக்கின்றனர்.

★

## கலர்ப் படம்

தமிழ் நாட்டில், முதன் முதலாகக் கேவா கலரில் படமெடுக்கும் பெயர் மாடர்ன் தியேட்டர்சாருக்குக் கிடைத்து விடுமென்று தெரிகிறது. ஆனால், அவர்களுக்கு முன்பாகவே கேவா கலரில் சில நடனங்கள் எடுத்து, நாராயணன் கம்பெனியார் தங்களது 'கணவனே கண் கண்ட தெய்வம்' என்கிற படத்தில் சேர்க்கப் போகிறார்கள். சமீபத்தில், பம்பாய் மெஹ்பூப் ஸ்டூடியோவில் அஞ்சலி, இன்னும் பதினெட்டு பேருள்ள நடனக் காட்சி, கேவா கலரில் சுமார் 1200 அடிகள் வரை படமாக்கப்பட்டதாம்.

## வளரும்படங்கள்

கவிஞர் கண்ணதாசன் எழுதும் மங்கையர் திலகம் வேகமாக வளர்ந்து கொண்டிருக்கிறது. டைரக்ஷன் பொறுப்பை நீரசாத் கவனித்து வருகிறார்.

★

'போனமச்சான் திரும்பிவந்தான்' படத்தை வெளியிட்ட மெர்க்குரி பிலிம்சாரின் அடுத்த படத்திற்கு, தோழர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி கதை-வசனமெழுதுகிறார். தயாரிப்பாளர் வெங்கடசாமி திறமையான டைரக்டர் ஒருவரை தேடிக் கொண்டிருக்கிறாராம்.

★

# 'எழுத்தாணி'யின்
# கடைசிப் பக்கம்

"முரசொலி ஒரு குடும்பப் பத்திரிகை; எங்கள் வீட்டு அடுப்பங்கரை வரை அதன் முழக்கம் கேட்கிறது. அப்படியிருந்தும் எங்களுக்கென நீங்கள் ஏன் ஒரு பரிசுத் திட்டம் துவங்கக் கூடாது?"—என்று சில நண்பர்கள் எழுதியிருக்கிறார்கள். அதன்படியே புத்தாண்டின் இரண்டாவது இதழிலிருந்து ஒரு சிறு பரிசுத் திட்டம் ஏற்படுத்துவதென முடிவு செய்திருக்கிறோம். கடைசிப் பக்கத்திற்கென அனுப்பப்படும் சிறப்பான—நகைச் சுவைதரும் பதிலை தோற்றுவிக்கும்படியான—கேள்வி கேட்பவருக்கு ஆறு மாத சந்தா பரிசளிப்பதென எண்ணியிருக்கிறோம். நீங்களும் கேளுங்கள். கடைசி பக்கத்திலே இன்னும் சுவை சேரட்டும்! இந்த வாரத்தின் பரிசு பெற்ற கேள்வியைக் கேட்டிருப்பவர் தோழர் (●) துரை; விழுப்புரம். அவருக்கு இந்த வாரம் முதல் ஆறு மாதங்களுக்கு முரசொலி அனுப்பப்படும்.

குமரவேல்; மாயூரம்.

(?) சினிமாவை குத்தூசியார் காரசாரமாகத் திட்டி எழுதுகிறாரே, ஏன்?

பெரியார் கார் நிதிக்கு நேஷனல் பிக்சர்ஸ்பெருமாள் 500 ரூபாய் தந்திருக்கிறாரே, அதனால் தான்! முரசொலி நேசன்; நாகர்கோவில்

(?) "அறிஞனை அறிஞனால் தான் அறிய முடியும்" என்ற கூற்றை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா?

உண்மைதான்! அண்ணாவின் பொருள் நிறைந்த பேச்சை 'சின்னது'களாலும், 'அவசரசாமி'களாலும் அறிந்து கொள்ள முடிவதில்லையே!

விமலாவதி பாண்டியன்; அலிசாவெல்ல; சிலோன்

(?) ஆரியர்கள் திராவிடத்தை விட்டுவிரட்டப்படவேண்டுமோ?

விரட்டப்பட வேண்டாம்; திருத்தப்பட வேண்டும்-என்கிறது தி. மு. கழகம்.

துரை. முருகேசன்; காரமடை

(?) இராஜதந்திரிக்கும் அரசியல் வாதிக்குமுள்ள வித்தியாசம் யாது!

முதிர்ந்த—அனுபவமிக்க அரசியல் வாதிதான் இராஜதந்திரியாகி விடுகிறான். மக்கள் நலம் விரும்புகிற இராஜரீகம் தெரியாத சிலர், தந்திரமொன்றையே துணையாகக் கொண்டு வாழ நேர்வதால், பின்னர் ஆச்சாரியாரைப் போல அரசியல்வாதி என்கிற அந்தஸ்தையும் இழந்து பஜனை பாட நேரிடுவதுமுண்டு!

ப. அரங்கப்பன்; காரமடை

(?) பேச்சுக்கலை ஏச்சுக்கலையாவது யாரால்?

அணிவேர் விட்டு வளர்ந்திருக்கும் நல்ல கொள்கைகளை அசைக்க முடியாமல், அதற்கு வித்தூன்றிய வித்தகர்கள் மீது மண்ணை வாரியிறைக்கும் கயவர்களால்-நாகப் பாம்புகளால்!

யாரோ; முகுந்தனூர்

(?) அரசியலை சூதாட்டமாக நினைப்பவர்கள் யார்?

மதுரையிலே சென்ற திங்கள் 'ஜோக்கர்' வேஷம் போட்டார்களே, அந்த 'சூதாடி'கள்தான்!

ராமு; வேதாரணியம்.

(?) கம்யூனிஸ்ட்சீனாவில்உயர்ந்த பதவிவகித்த ஒருவர் தற்கொலை செய்துகொண்டாராமே — அது கொலையா? தற்கொலையா?

இரண்டும் ஒன்றுதான்—கம்யூனிஸ்ட் நாடுகளிலே அரசியற் கொலைக்கும், தற்கொலைக்கும் அதிக வித்யாசமில்லை.

அங்குராஜ்; சென்னிமலை

(?) சிரிப்பு ஏன் வருகிறது?

டாடா, பிர்லாவின் நிழல்கள் 'சோர்ட்டா சோஷலிசம்' பேசும் போது!

(?) சமுதாயத்தின் சக்தி எது?

நல்ல அரசாங்கம்.

நடராஜ்; சூளுர்.

(?) ஒய், எழுத்தாணியாரே! வாழ்க்கை என்றால் என்ன என்று கூற முடியுமா?

அன்பு நீரிலே மிதக்கவிடப்படும் அறிவுத் தோணி தான் வாழ்க்கை.

எஸ். சுந்தரம்; சிங்கப்பூர்.

(?) ஆச்சாரியார் தூங்கும்போது என்ன கனவு காண்பார்?

ஓநாயின் கனவில் ஆட்டுக்குட்டிகள் தானே தோன்றும்!

மூர்த்தி; காரைப்பிடாகை.

(?) மனிதன்சாகும்போது என்ன நினைப்பான்?

நிச்சயம் பிரகாசம் சாக நேர்ந்தால் பதவியைத்தான் நினைப்பார்!

(?) பசி என்பது என்ன?

காங்கிரஸ் அரசாங்கத்துப் பிரஜை பிறக்கும்போது கூடப் பிறந்து.

வளர்ந்த மனிதர்கள் சாவதற்கும் காரணமாக இருக்கும் உணர்ச்சி.

கே. சுப்பிரமணியம்; பேராவூரணி

(?) தி. க. விற்கும், தி. மு. க. விற்கும் என்ன வித்தியாசம்?

பின்னதில் ஒரு முன்னேற்றம் சேர்ந்திருக்கிறது; அவ்வளவு தான்!

கோதண்டராமன்; பண்டுலோயா

(?) மதுரையிலே உங்களுக்கு எதிரிகள் மலையென வளர்ந்துவிட்டார்களாமே, இது உண்மையா?

சேச்சே! வைக்கோர் போரை மலை என்று வர்ணிக்கிறீரே! எங்கள் கொள்கைத் தீயிலே ஒரு பொறி பட்டாற் போதும்; அந்தப் போர் எதிர் நிற்க முடியாமல் எரிந்து சாம்பலாகிவிடும்!

மணி; ராமநாதபுரம்.

(?) உருண்டோடிடும் பணம் காசுகள் பெற உற்ற வழி எது?

உயரத்திலிருப்பவனைப் பார்த்து உருமுவதல்ல! உழைப்பு! உழைப்பு!! உழைப்பு!!!

தேசீயவீரன்; அறந்தாங்கி.

(?) திராவிடநாடு கோரிக்கை பைத்தியக்காரத்தனம் என்கிறேன் நான்?

ஆமாம்; மந்த மதியினர் தமக்கு புரியாத கொள்கைகளை பைத்தியக்காரத்தனம் என்று தான் அழைக்கிறார்கள்.

செங்கோடன்; தாராவி.

(?) சாப்பாடு; சாக்காடு-இதில் எதை விரும்புகிறீர்?

அடிமை நாட்டில் கிடைக்கும் அறுசுவை சாப்பாட்டை விட விலங்கொடித்த தாயகத்தில் கிடைக்கும் சாக்காட்டைத் தான் விடுதலை வீரன் விரும்புவான்.

● துரை; விழுப்புரம்

(?) பதவிஆசை இல்லாதவர்கள் யார்?

ஒன்று காங்கிரஸ் கட்சியில் சேராதவர்கள்; அல்லது காங்கிரசில் சேர்ந்து விலகியவர்கள்—இவர்கள் தான்!

கே. எஸ். மதியரசு; செந்துறை.

(?) 'உலக சரித்திரம்' எழுதிய நேருவிற்கும் 'ஐந்தாண்டுத் திட்டம்' காணும் நேருவிற்கும் உள்ள வித்தியாசமென்ன?

முன்னையவர் குளிர் மலர்ச் சோலையின் தோட்டக்காரன்; பின்னையவரோ, கள்ளிமலர்க் காவலன்!

## "தீச்சுடர்"

தீச்சுடர் பெரிய அளவில் மே திங்கள் முதற்கொண்டு சென்னையிலிருந்து வெளியிடுவதற்கான ஏற்பாடுகள் நடத்திக் கொண்டிருக்கின்றது. அதற்குள் ஏஜெண்டுகள், சந்தாதாரர்கள் கணக்கைத் தீர்த்துக் கொள்ள விரும்பினால், அவரவர்கள் விருப்பத்தை அன்பு கூர்ந்து உடனே திருச்சி அலுவலகத்திற்கு எழுதவும்.

நிர்வாகி : தீச்சுடர், திருச்சி

# கொள்கை வளருது கோபுரம் போலே!

### தி. மு. க. கிளைக் கழக தேர்தல் முடிவுகள்.

### திருவாரூர்

செயலாளர்; இரா. விசயராகவன்
து-செயலாளர்; ச. கருப்பசாமி
பொருளாளர்; கருணை எம். ஜமால்
மா-உறுப்பினர்; மு. கருணாநிதி, சே. பெ. சேதுபதி

### குடந்தை

செயலாளர்: சு. பத்மநாபன்
து-செயலாளர்: கோ. நாராயணசாமி
பொருளாளர்: ந. சந்திரா

### பெரியகுளம்

செயலாளர்: ஏ. எஸ். ஹனிபா
து-செயலாளர்: எம். கே. ஆறுமுகம்
பொருளாளர்: பி. அப்துல் காதர்
மா-பிரதிநிதி; ஆர். வெற்றிச் செல்வன், ப. கு. இராமசாமி

### சாத்தூர்

செயலாளர்; பி. பாலகிருட்டிணன்
து-செயலாளர்; பி. காசிராசன்
பொருளாளர்; ஜி. எஸ். இளங்கோ
விளம்பர-உறுப்பினர்; சு. கலைச்செல்வன்
மா-உறுப்பினர்; பி. பாலகிருட்டிணன், சன்யாட்சென், எம். நடராசன்.

### அம்மாசத்திரம்

செயலாளர்; மு. கந்தசாமி
து-செயலாளர்; இரெ. கிருஷ்ணமூர்த்தி
பொருளாளர்; வி. தியாகராசன்
மா-உறுப்பினர்; கு. கண்ணன்

### சிறு மதுரை

செயலாளர்; நீ. அ. பழனி
து-செயலாளர்; என். தணிகாசலம்
பொருளாளர்; கே. தங்கவேல்
மா-உறுப்பினர்; எம். ஏ. தாண்டவராயன்

### தாலிகட்டிபாளையம்

செயலாளர்; ப. முத்து
து-செயலாளர்; சி. நடராசன்
பொருளாளர்; சி. செல்லப்பன்
வி-உறுப்பினர்; சி. குழந்தைவேல்
மா-உறுப்பினர்; ஊ. ப. சண்முகம்

### வத்திராயிருப்பு

செயலாளர்: பி. பாண்டியன்
து-செயலாளர்: சு. கி. ச. பாலு
பொருளாளர்: த. இராசேந்திரன்
மா-உறுப்பினர்; பிச்சைத்துரை

Edited, Printed and published by M. Karunanithi at Murasoli Press, 4/128, Mount Road, Madras-6.

